லியோவின்

# போகர் 7000

கூறும்

# சீனாவில் போகர் சித்தர்




முனைவர் மெய். சித்ரா, ஹாங்காங்

# போகர் 7000
கூறும்
# சீனாவில் போகர் சித்தர்

முனைவர் மெய். சித்ரா
ஹாங்காங்

**DK Publishers**
Chennai
Phone + 919940498435

# புத்தக விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | போகர் 7000 கூறும் சீனாவில் போகர் சித்தர் |
| உரிமையாளர் | : | குமரன் |
| நூலாசிரியர் | : | முனைவர் மெய். சித்ரா |
| பதிப்பு | : | 2021 |
| நூலின் அளவு | : | டெமி |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| பக்கம் | : | 136 |
| விலை | : | ₹. |
| வெளியீடு | : | **DK Publishers**<br>Chennai<br>Phone + 919940498435 |
| ஒளி அச்சு | : | எஸ். அனுராதா |
| அச்சிட்டோர் | : | |

# உள்ளடக்கம்

# முன்னுரை

**சீ**னக் குடியரசு தலைவர் சீஜிங்பிங் இந்தியாவிற்கு வந்தபோது, அவரும் இந்திய பிரதமர் நரேந்திர மோடியும் மகாபலிபுரத்தில் சந்தித்தார்கள். அதற்கு முக்கிய காரணம் சீனாவிற்கும் தமிழகத்திற்கும் பல ஆயிரம் வருடங்களாக தொடர்பு இருந்தது என்ற வரலாற்று நம்பிக்கையே. அதற்கு முன்பு, நம் பிரதமர் சீனா சென்ற போது, அவரும் குடியரசுத் தலைவரும் சந்தித்த இடம் சிஎன் (Xian) என்ற வரலாற்று சிறப்புமிக்க நகரம். இந்த இரு பகுதிகளும் நம் சீன தமிழ் உறவுகளின் மிக முக்கிய பங்காற்றிய பகுதிகள் என்று நிச்சயம் கூறலாம். ஏனெனில் சிஎன் என்ற நகரின் பழைய பெயர் சிங்கன் என்ற தமிழ் பெயர் என்பது எனக்குத் தெரிய வந்தபோது வியப்பாக இருந்தது.

சிங்கமே வாழாத பகுதியில் சிங்கத்தை குறிக்கும் வகையில் சிங்கன் என்ற பெயர் ஒரு ஊருக்கு வைக்கப்பட்டது என்றால், நிச்சயம் அந்த ஊரிலே தமிழருக்கு மதிப்பு தரப்பட்டு வந்தது என்று தெளியலாம்.

இந்தப் போக்கிலேயே, சீனத் தமிழ் தொடர்புகளைப் பற்றிய என்னுடைய ஆய்வை, சீனாவிற்கு சென்று வந்ததாக கூறும் போகர் சித்தர் அவர்களின் நூலான போகர் ஏழாயிரத்தில் அவர் கூறிய கூற்றுக்களை ஆராய்ந்து உங்கள் முன் வைத்திருக்கின்றேன்.

சித்தர்கள் உண்மையில் வாழ்ந்தார்களா என்ற கேள்வி பலர் மனதிலும் எழுந்த வண்ணம் இருப்பதை நான் பல முறை கேட்டிருக்கின்றேன். நானுமே அந்தக் கேள்வியை எழுப்பியவள்

தான். ஆனால், போகர் ஏழாயிரத்தில் இருக்கும் குறிப்புகளும், சீனாவில் பதிவு செய்யப்பட்ட குறிப்புகளும் ஒத்ததாக இருப்பதைக் காணும் போது, சித்தர்கள் நிச்சயம் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதை என்னால் உணர முடிந்தது. அதன் அடிப்படையில்தான், இந்த நூலை உங்களுக்கு தர, என்னால் இயன்றவரை, போகர் சித்தர் கூறியவற்றை கூறி அதற்கான சீனப் பின்னணியையும் கூறியுள்ளேன். அது மிகவும் விரிவாக இல்லாவிட்டாலும், அதற்கான ஆய்வுகள் தொடர்ந்த வண்ணம் இருக்கும். அதைப்பற்றி அடுத்த நூலில் தெரிவிக்க முடியும் என்ற நம்பிக்கையுடன் இந்த நூலை உங்கள் கைகளில் நான் வைப்பதற்காக மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்த நூலைப் படித்து உங்களுடைய கருத்துக்களை என்னுடன் பகிர்ந்து கொண்டால் என்னுடைய மேலதிக ஆய்விற்கு அது மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றேன்.

இந்த நூல் சீனத் தமிழ் உறவுகளுக்கான ஆய்வுகளின் ஒரு சிறு துரும்பே. இந்தத் துறையில் பல ஆய்வுகள் செய்யப்பட வேண்டும். இந்த உறவினையும் பலப்படுத்திக் கொண்டால், இந்திய-சீன உறவும் பலப்படுத்தப்படும் என்று நம்புகின்றேன்.

**முனைவர் சித்ரா**
ஹாங்காங்
tamilandchina@gmail.com

# அணிந்துரை

**நீ**டு தமிழின் நீட்சியைப் பாடு தமிழின் வழியே அறியமுடிகிறது. தொன்மைத் தமிழையும் பத்தியையும் பிரிக்கவியலாது என்பதனை இந்நூல் மேலும் ஒருமுறை மெய்ப்பிக்கிறது. ஆழ்ந்த ஆய்வு நோக்கத்தில் எழுதப்பட்டிருந்தாலும் சித்தர்களின் வாழ்க்கையினைக் காட்சிப்படுத்தி ஒரு கதைநூல் போலவே காட்சியளித்துப் படிக்கத் தூண்டுகிறது. அகிலம் முழுதும் ஆள்கிறது தமிழ் என்பதனை, இந்நூல் பகரும் மெய்ச்சான்றுகளின் வழி அறியமுடிகிறது.

நல்ல அனுபவம் மிக்க ஆய்வுப்புலத்தாலும், நுண்மான் நுழைபுலத்தாலும் கன்னித்தமிழைக் கடைவிரிக்கிறது இந்த ஆய்வு நூல். நல்லதோர் ஆய்வுக் கிடங்கிற்குள் என்னைப் பூட்டிவைத்து, பத்தித் தமிழைக் கதையாகச் சொல்லும் பாட்டியாக இந்நூல் எனது கையில் தவழ்வதனை எண்ணி எண்ணி இறும்பூது எய்துகிறேன். கன்னித் தமிழைக் கரைத்து வைத்த கிண்ணத்தில் என் எண்ணத்தையும் ஊற்றி இரண்டறக் கலந்துவிட்டுப் பார்க்கிறேன் கையில் இந்த நூல் புன்னகைக்கிறது. அன்னைத் தமிழை என்றும் வாழவைக்கும் இந்நூலாரின் கைவண்ணம். சித்தத்தை உணர்வோர் சித்தர். அத்தகையோரின் வாழ்க்கைத் தடங்களைப் பார்த்தபொழுதே கணிக்கிறேன், அவர்களின் அருளாற்றலை...பேராற்றலை...எண்ணி எண்ணிச் சித்தர்களின் சித்தத்தைச் சுவைக்கிறேன். களிக்கிறேன். காலமெலாம் கன்னித் தமிழைப் பத்தித் தமிழாகவும் பரிணமிக்கச் செய்யும் இந்நூலாரின் செய்கை போற்றத்தக்கது. அன்னைத் தமிழின் அடியொற்றி மெச்சுகிறேன். என்றும் கிட்டட்டும் திருவருள்! பத்திச்சுவை நனி சொட்டட்டும்! காலமெல்லாம் கன்னித் தமிழே ஊறட்டும்! அதனுள் இத்திருவுலகே.

திளைக்கட்டும்! வெல்க தமிழ்கொண்டு!

என்றும் மெய்யருளுடன்,
இயக்குநர்,
அகர முதலித் திட்ட இயக்ககம்,
சென்னை.

# அறிமுகம்

இந்த நூல், எனக்கு என் வாழ்வில், ஒரு தனித்துவமான அனுபவத்தை தந்தது என்றே கூற வேண்டும். என்னுடைய 25 ஆண்டுகள் ஹாங்காங்கில் வாழும் வாழ்க்கையில், நான் சீனர்களைப் பற்றி அவ்வளவு தெரிந்து கொள்ளவில்லை என்பதை இது உணர்த்தியது. இங்கு வாழ்ந்தபோது நான் அவர்களது மொழியை சிறிதளவு கற்றேன். ஆனால் அவர்களது இசையையும், நடனத்தையும், பல கலைகளையும் போதிய அளவிற்கு நான் கற்றதில்லை.

என்னுடைய மைத்துனரின் மணி விழாவிற்கு டிசம்பர் 2019, இந்தியா சென்றபோது எனக்கு பல கோயில்களுக்கு செல்லும் வாய்ப்பு கிட்டியது. அதற்கு முன்பு நான் தமிழ் கொரியத் தொடர்புகளை பற்றிய ஒரு எளிய ஆய்வு செய்திருந்தேன். தென்னகத்தில் இருந்து சென்று, கொரியாவில் பேரரசியாக திகழ்ந்தாள் ஒரு தமிழ்ப்பெண் என்று நிரூபிப்பதற்கான சான்றுகளை அப்போது நான் தேடி வந்தேன். அதில் இரட்டை மீன் குறியீடு ஒரு முக்கிய பங்காற்றியது. அப்படி நான் மீன் குறியீடுகளை நம் கோயில்களில் தேடியபோது, பல குறியீடுகளை நான் காண முடிந்தது. ஊர் திரும்பிய பின் அந்த இரட்டை மீன் குறியீடு, மீனின் உருவம் இல்லாமல் ஒரு வட்டத்தில் உள்ளதை பார்த்த போது, அது சீனர்களின் யின் யாங் என்ற குறியீட்டை ஒத்ததாக இருந்ததாக எனக்குத் தோன்றியது.

அதை நான் ஆய்வு செய்தபோது, சீனாவில் ஆண்-பெண், காலை-மாலை, இருள்-வெளிச்சம், சூடு-குளிர்ச்சி என்ற

எதிர்வினைகளை உருவகப்படுத்துவதாக இந்தக் குறியீடு இருப்பதாக அறிந்தேன். இந்தியாவில் இதற்கு என்ன பெயர் என்று ஆராய்ந்தபோது, பல சித்தர்கள் பாடிய பாடல்களில் சிவசக்தி, நாதவிந்து என்ற சொற்கள் விரவிக் கிடப்பதை பார்த்தேன். அப்பயென்றால் கோயில்களில் உள்ள இந்தக் குறியீடு, சிவசக்தி குறியீடாக இருக்க வேண்டும் என்று எண்ணினேன். கோயில்களில் இந்தக் குறியீடு பல கோணங்களில் இருந்தன. அவற்றிற்கும் சீனாவில் எனக்குப் பதில் கிடைத்தது. எப்படி நம் கோயில்களில் உள்ள குறியீட்டுக்கு, எனக்கு சீனத் தரவுகளில் இருந்து பதில் கிடைக்கின்றன என்று ஆச்சரியமாக இருந்தது. அப்போதுதான் லவோ ட்சு (Lao Tzu) என்பவரின் தவோ மதத்தைப் (Taoism) பற்றியும் கன்பியூசியஸ் (Confucius) பற்றிய விவரங்களையும் நான் அறிந்துகொண்டேன். அவர்களது நூல்களையும் நான் படித்து அவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள் என்று அறிய முயன்றேன்.

அப்போது விக்கிபீடியாவில் ஒரு பதிவை காண நேர்ந்தது. போகர் சித்தர் சீனாவின் சிறந்த ஞானியாக விளங்கிய தவோ மதத்தின் குருவான லவோ ட்சு என்றும் அவருடைய குருவான காலாங்கிநாதர் சீனத் தத்துவ ஞானியாக போற்றப்படும் கன்பியூசியஸ் என்றும் பதிவிடப்பட்டிருந்தது. ஆனால், இதை யார் கூறினார்கள் என்று தேடியபோது, அதற்கு எனக்கு பதில் கிடைக்கவில்லை.

போகர் சித்தர் லவோ ட்சு ஆக இருக்கலாம் என்று என்னுடைய ஆய்வில் நான் கண்டறிந்த உண்மை. காலாங்கிநாதர் நிச்சயமாக கன்பூசியஸாக இருக்க முடியாது. ஏனென்றால் நம் சித்தர்களின் கொள்கையோடு இவரது கொள்கைகள் மாறுபட்டு இருப்பதே அதற்குக் காரணம். ஆனால் காலாங்கிநாதர் யார் என்பதை என்னால் இன்னும் அறுதியிட்டுக் கூற முடியாத நிலையில் இருக்கின்றேன். இதற்கு சீனாவில்

பலர் இருக்கின்றார்கள். அதில் யார் என்று குறிப்பாகச் சொல்ல இன்னும் தடயங்களை தேடி வருகிறேன்.

இந்தத் தருணத்தில் எனக்கு போகர் 7000 என்ற நூல் இணையதளத்தில் 7000 பாடல்களுடன் இருந்த ஒரு ஆவணம் கிட்டியது. அதிலும் போகர் சித்தர் சிவசக்தி, நாதவிந்து பற்றி கூறியிருந்தார். பிப்ரவரி 20ஆம் தேதி நான் ஒரு மாநாட்டில் கலந்து கொள்வதற்காக மறுபடியும் இந்தியாவிற்கு செல்ல வாய்ப்பு ஏற்பட்டது. அப்போது விமானத்தில், நான் போகர் 7000 நூலை படிக்க எண்ணம் கொண்டு ஆரம்பித்தேன். பயணத்தின்போது ஒரு நானூறு பாடல்களை படித்திருப்பேன். அதில் ஆறாவது பாடலில் போகர் சித்தர் அவர்கள் நான் சீனாவிற்கு பறந்தேனே என்று ஒரு கூற்றை எழுதியிருந்தார். நானும் பிறகு சீனா வரும் வரும் என்று பார்த்தால், அந்த 400 பாடல்களில் வரவில்லை. தற்போதைய ஆய்வில்தான் தொள்ளாயிரத்து தொண்ணூத்தி ஆறாம் பாடலில் மறுபடியும் சீனாவைப் பற்றி பாடி இருப்பதைக் கண்டேன். அந்தச் சமயத்தில் சீனாவின் சுன்சாவ் (Quanzhou) என்ற இடத்தில் தமிழர்களின் கோயில்கள் கட்டப்பட்டதும், அது இடிக்கப்பட்டு, அங்கிருந்த பொருட்கள் எல்லாம் பல வீடுகளில் செங்கற்கள் ஆகவும் தூண்களாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதும், அங்கு ஒரு தமிழ்க் கல்வெட்டு இருந்தது போன்றச் செய்திகளை அறிந்தேன். இதைப்பற்றி நான் ஐந்து ஆறு வருடங்களுக்கு முன்பு படித்த போதும் அதில் அத்தனை கவனம் செலுத்தவில்லை. அதில் மேலும் அதிக நாட்டமிருக்கவில்லை. இந்த இடத்திற்குச் சென்று பார்க்கும் விருப்பம் மட்டும் ஏனோ இருந்து கொண்டே இருந்தது. இன்று வரையிலும் இருக்கின்றது.

சிவசக்திக் குறியீட்டைப் பற்றிய ஆய்வை மட்டுமே செய்து, ஒரு ஆய்வுக்கட்டுரையை தமிழ்நாடு திறந்தவெளிப் பல்லகலைக்கழகத்தில் சமர்ப்பித்து, அதைக் கருத்தரங்கிலும்

வழங்கினேன். அதன் பிறகு, சீனாவைப் பற்றிய ஆய்வு அங்கேயே நின்றுவிட்டது.

கொரோனா காலத்தில் நான் பிறந்த ஊரான சின்னாளப்பட்டியில் ஆறு மாதங்கள் தங்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அங்கு இருக்கும்போது, மேலும் தமிழ் கொரிய உறவுகள் பற்றியும், ஜூன் மாதம் முதல், தமிழ் சுமேரிய உறவுகளைப் பற்றியும் ஆய்வில் பல விஷயங்களை அறிந்தேன்.

*2021* ஜனவரி மாதம் நான் அறிந்த விஷயங்களை காணொளிகளாக வெளியிட ஆரம்பித்தேன். அப்போது ஏப்ரல் மாதம் தமிழகத்திற்கும், சீனாவிற்கும் உள்ள தொடர்புகளை சிறிது ஆய்வு செய்யலாம் என்ற எண்ணத்தில், தமிழகத்திற்கு வந்த சீனப் பயணிகள் தமிழகத்தைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார்கள் என்று பார்க்க ஆரம்பித்தேன். அதைப்பற்றிய ஒரு தொடர் காணொளிகளையும் வெளியிட்டு வந்தேன். அந்தத் தருணத்தில் இரண்டு முகமதியர்கள், ஒன்பதாம் நூற்றாண்டிலே சீனாவிற்குச் சென்ற போது அங்கு கண்ட விஷயங்களை எழுதி இருந்தார்கள். அதில் ஒரு கருத்து என்னை வியக்க வைத்தது. நம் ஊரில் தான், நாம் மனுநீதி சோழன் ஆராய்ச்சி மணியை வைத்து நாட்டிலே நீதியை காத்தான் என்று அறிந்து இருக்கின்றோம். இதற்கும் மேலாக இலங்கை அரசன் எள்ளானும், இது போல் செய்து இருக்கிறான் என்று ஆய்வாளர்கள் கூறுவதையும் பார்த்தேன். ஆனால், சீனாவிற்கு அது எப்படி சென்று இருக்கும் என்று ஒரு ஐயப்பாடு ஏற்பட்டது. மேலும், இந்தப் பயணிகள் கடலிலே கொந்தளிப்பிலிருந்து தப்ப, ஒரு பெண் கடவுளை வணங்கினார்கள் என்று ஒரு பயணி கூறி இருந்ததை நான் கவனித்தேன். அது மணிமேகலா தெய்வமாக இருக்குமோ என்ற ஐயம் எழுந்தது. மேலும், அப்போதுதான் சீனர்களுக்கும் இந்தியர்களுக்கும் வர்த்தகம் மட்டுமல்லாமல், புத்த மதத்திற்கு அப்பாற்பட்டு, வேறு தொடர்புகளும் இருந்திருக்கின்றன என்ற ஒரு ஐயம் ஏற்பட்டது.

இதற்கிடையில், கேரளாவில் உள்ள கோயில்களின் கட்டிடக்கலையும் சீனர்களின் கோயில் கட்டிடக்கலையும் ஒத்துப் போகின்றதா என்ற ஒரு சிறு ஆய்வையும் செய்யத் துவங்கினேன். இதற்கு காரணம், ஜாங் ஹே என்ற ஒரு சீனர், தென்னகத்திற்கு ஏழு முறை வந்து சென்றிருக்கின்றார். அதனால் இரு நாடுகளின் கட்டிடக்கலைகளிலும் ஏதேனும் ஒப்புமை இருக்கிறதா என்று பார்க்கத் தோன்றியது. அப்படிப் பார்க்கும்போது, கேரளாவில் உள்ள பல கோயில்கள் ஓடுகளால் ஆனவை; மரத்தால் ஆனவை. அதேபோன்றுதான் சீனாவில் உள்ள கோயில்கள் அனைத்தும் ஓடுகளால் ஆனவை; மரத்தால் கட்டப்பட்டவை. இந்த ஒப்புமையைப் பார்த்துச் செல்லும் போதுதான் சீனாவிலுள்ள சாகாவரம் பெற்ற மாந்தர்களை பற்றி மேலும் அறிய உதவியது.

நாம் நம் சித்தர்களையும் சாகாவரம் பெற்றவர்கள் என்று கூறுவது அனைவரும் அறிந்ததே. மேலும் அவர்கள் பலமுறை சமாதி அடைந்து இருக்கிறார்கள் என்பதும் இந்த இரு நிலங்களிலும் பொதுவாகக் கூறப்படும் கருத்தாக இருப்பதைக் கண்டபோது அதில் மேலும் ஆய்வுகள் செய்யத் தோன்றியது.

இந்தத் தருணத்தில், கொரோனா பிடியில் சிக்கிய என்னுடைய இளைய மைத்துனர் இறைவனடி சேர்ந்தார். அது எங்கள் குடும்பத்திற்கு ஒரு பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. என் கணவரால் உடனே ஊர் சென்று திரும்ப வழியல்லாமல் போனது. கொரோனாவின் காரணமாக விமானங்கள் இல்லாததற்கு இது ஒரு முக்கிய காரணம்.

என் கணவர், நாம் ஹாங்காங்கை விட்டுவிட்டு, இந்தியாவிற்கு திரும்பி சென்று விடலாம் என்று முடிவு செய்தார். அப்போது என்னுடைய மகள் மேற்படிப்பிற்காக அமெரிக்கா செல்வதாக இருந்ததால், அவள் ஆகஸ்டு மாதம் அமெரிக்கா சென்ற பிறகு, இந்தியாவிற்கு திரும்பலாம் என்று முடிவு எடுக்கப்பட்டது.

நாடு திரும்பும் முன் என் ஆய்வை முடிக்க எண்ணினேன். நான் ஒரிசா பாலு ஐயா அவர்களின் தென்புலத்தார் குழுவில் இருந்த காரணத்தால் அவரிடம் என்னுடைய இந்த ஐயத்தை கேட்கலாம் என்று தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். கடலில் செல்பவர்கள் வணங்கும் தெய்வம் என்ன என்ற கேள்வியை கேட்டேன். அதற்கு அவர் 'நான் அதற்கு பதில் சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்' என்று தொடங்கினார். பிறகு அவர் சொன்னது, எமனின் மனைவி ஐயோ என்ற கடவுளை தான் கன்னியாகுமரி கடலோடிகள் வணங்குகிறார்கள் என்றார். சீனாவில் யமனுக்காக பல கோயில்கள் உள்ளன என்றும் குறிப்பிட்டார். இது என்ன வித்தியாசமாக இருக்கிறதே என்ற எண்ணம்தான் தோன்றியது. உண்மையில் கடலால் சூழப்பட்ட ஹாங்காங்கில் மக்கள் எந்த கடவுளை வணங்குகிறார்கள் என்று பார்க்கவும் தோன்றியது.

இருக்கும் இரண்டு மாதங்களில் நான் என்னுடைய ஆய்வை செய்து முடிக்க வேண்டும் என்று வேக வேகமாக என் பணியைத் தொடங்கினேன். முதலில் ஹாங்காங்கில் வாழும் மக்கள் எந்தக் கடவுளை வணங்குகிறார்கள் என்று பார்ப்பதற்காக சில கோயில்களை தேர்வு செய்து அங்கு சென்று பார்க்க முடிவு செய்தேன்.

அதற்கு முன்பாக, அவர்கள் வணங்குவது டின் ஹாவ் (Tin Hau) என்ற ஒரு பெண் தெய்வம் என்பதை அறிந்ததும், அதைப் பற்றி இணைய தளத்தில் விவரங்களைச் சேகரிக்க ஆரம்பித்தேன். எனக்கு முதலில் கிட்டிய விவரம், மக்காவு நாட்டில் டின் ஹாவ் தெய்வத்தை அம்மா என்று அழைப்பதாக போட்டிருந்தது. அம்மா என்பது நம்முடைய அம்மன் என்ற பெயருடன் ஒத்துப் போகிறது என்ற எண்ணம்தான் முதலில் வந்தது. அவர்கள் வணங்கும் அந்தப் பெண்தெய்வம், கருமை நிறத்துடனும் நெற்றியில் பொட்டு வைத்து இருந்ததை பார்த்தவுடன் எனக்கு வியப்போ வியப்பு.

மேலும், தவோ மதத்தினரின் தெய்வங்களும் 200க்கும் மேற்பட்டு இருப்பதை அறிந்தேன். ஹாங்காங்கில் 70க்கும் மேற்பட்ட கோயில்கள் உள்ளன. 20ஆம் நூற்றாண்டில், சீனாவின் புரட்சிக் காலத்தில், மதங்களுக்கு தடை விதிக்கப்பட்ட போது, தென் பகுதிகளில் இருந்த நாடுகளுக்கு குடிபெயர்ந்தவர்கள், தங்களுடன் தவோ மதத்தையும் எடுத்து வந்ததால், ஹாங்காங், மகாவ் மற்றும் தைவானில் இந்தத் தெய்வங்களுக்கான கோயில்கள் ஏராளமாக இருப்பதை அறிந்தேன்.

நான் முதன்முதலில் ஒரு கோயிலுக்குச் சென்ற போது, அங்கு இருக்கும் கடவுளர்கள் எல்லாம் நம்முடைய கடவுளர்களாக ஏன் இருக்கக்கூடாது என்ற எண்ணம்தான் தோன்றியது. எனக்கு இந்த விஷயம் மிகவும் சுவாரசியமாக இருந்தது. மேலும் பல கோயில்களுக்குச் சென்று பார்த்தேன். பார்க்கப்பார்க்க நம்மைப்போல கல்விக்குக் கடவுள், செல்வத்திற்கு ஒரு கடவுள், குழந்தைப்பேறுக்கு ஒரு கடவுள் என்று பல கடவுளர்கள் இருப்பதை அறிய முடிந்தது.

இப்படி நான் பல கோயில்களுக்குச் சென்று வந்தபோது, நான் வாழும் பகுதியில் ஒரு கோயில் இருப்பதை அறிந்தேன். அந்தக் கோயிலுக்கு நான் முன்பே சென்று இருந்தாலும், அது எந்தக் கடவுள் என்றெல்லாம் அப்போது எனக்குத் தெரிந்திருக்கவில்லை. இப்போது ஆய்வின் காரணமாக ஹவ் வாங் (Hau Wong) என்ற அந்த கோயிலுக்கு சென்றபோது, அந்தக் கடவுள் நோய்தீர்க்கும் கடவுள் என்று கூறப்பட்டிருந்தது. அந்தக் கோயிலில் பணி செய்பவரிடம் பேசியபோது, பல விஷயங்களை அறிந்து கொண்டேன்.

வீட்டிற்கு வந்ததும், நம் தமிழக கோயில்களில் மருத்துவ கடவுளாக கும்பிடப்படுபவர் யார் என்று பார்த்தபோது ஒன்று தன்வந்திரி என்று இருந்தது. இந்தக் கடவுள் தன்வந்திரி ஆக இருக்குமோ என்ற எண்ணம் ஏற்பட்டது. பிறகு போகர் சித்தர்

அவர்கள் சீனாவில் போ-யாங் என்று அழைக்கப்பட்டு, தவோ மதத்தை உருவாக்கியவர் என்ற கருத்தை முன்பு படித்தது ஞாபகத்திற்கு வந்தது. இந்தக் கோயில்கள் அனைத்தும் தவோ மதத்தைப் பின்பற்றுவோர் வணங்கும் கோயில்கள். லவோ ட்சு அவர்களின் சீடன் சாங் டாவ்லிங் (Zhang Daoling) தவோ மதத்தைப் பரப்பியவர் என்று தெரிந்தது.

அப்படியென்றால், போகர் சித்தரை பற்றி ஆய்வு செய்யலாம் என்று நுழைந்தேன். மீண்டும் போகர் ஏழாயிரத்தை படிக்கத் தொடங்கினேன். ஆனால் இம்முறை தரவுகளை ஆராயும் வழி எனக்குத் தெரிந்ததால், போகர் சித்தர் சீனாவிற்கு வந்ததைப் பற்றிய சொற்களை முதலில் தேட ஆரம்பித்தேன். 400க்கும் மேற்பட்ட இடங்களில் சீனர்களைப் பற்றியும் சீனாவிற்கு தான் சென்று வந்ததைப் பற்றியும் கூறியதைப் பார்த்து வியப்படைந்தேன். இது நான் ஒரு வருடத்திற்கு முன்பு ஆய்வு செய்தபோது என் கண்களில் படவே இல்லை.

இப்போது அதை ஆய்வு செய்யும்போது, என்னுடைய ஆய்வு ஒரு முழுமை பெற்று விட்ட உணர்வு. கொரிய ஆய்வின் போது இணையத்தின் மூலமாக சீனா மற்றும் ஜப்பான் சென்று பின், சுமேரிய ஆய்வில் சுமேரியா சென்று, சுமேரியாவில் இருந்து மீண்டும் சீனா வந்து, என்னுடைய ஆய்வு ஒரு வட்டத்திற்குள் வந்து விட்டது.

நான் படிக்கப்படிக்க, கோயில்களுக்குச் சென்று வர வர, எனக்கு கோயில்களில் இருக்கும் கடவுளர்களும் நம்முடைய கடவுளர்களும் நிச்சயம் ஒன்றாக இருக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. பிறகு நான் லவோ ட்சு அவர்களைப் பற்றியும் அவருடைய மறுபிறப்புகளைப் பற்றியும் அறிந்த போது பெரும் வியப்பு ஏற்பட்டது.

தவோ மதக் கொள்கைகள் அனைத்தும் நம்முடைய சைவ மதக் கொள்கைகளே என்பதை நான் உணர ஆரம்பித்தேன்.

போகர் ஏழாயிரத்தில் போகர் சித்தர், தான் சீனாவிற்குச் சென்று, அவர்களுக்கு பல மாற்றங்களை கற்றுத் தந்ததாகப் பாடியிருக்கின்றார். ஒருமுறை அல்ல, இருமுறை அல்ல பலமுறை அவர் சீனாவிற்கு வந்து சென்றதை பல பாடல்களில் அவர் தெரிவித்திருக்கின்றார்.

சீனாவில் தாவோ மதத்தின் தரவுகள் பல ஆண்டுகளாக பலராலும் ஆராயப்பட்டு வருகின்றன. அதில் ரசவாதம் பற்றிய ஆய்வுகள் பல நூல்களாக வெளிவந்துள்ளன. ரசவாதத்திற்குப் பெயர் போனவர் வெய் போ யாங் என்பவர். ரசவாதத்திற்கு தேவையான பொருட்கள், அது செய்யும் முறை, அதை செய்ய பயன்படுத்தப்படும் பொருள்கள் என்று பல ஆய்வுகள் வெளியிடப்பட்டுள்ளன. அதைப் படிக்கும்போது, போகர் ஏழாயிரத்தில் கூறியுள்ள பல விஷயங்கள் அதில் இருக்கின்றன என்று நான் உணருகின்றேன். தமிழ் மொழி, சீன மொழி மற்றும் ஆங்கில மொழி இந்த மூன்றையும் அறிந்திருந்தால் தான் அந்தப் பொருட்கள் என்னென்ன என்று நம்மால் உறுதியுடன் கூற முடியும். செய்யும் முறைகளும், செய்யப் பயன்படுத்தும் பாத்திரங்களும் மிகவும் எளிமையாக இரண்டிலும் இருப்பதை நாம் அறிய முடிகின்றது.

இதன் காரணமாகத்தான் நான் போகர் சித்தர் போ-யாங் என்ற பெயர் கொண்ட லவோ ட்சு மற்றும் வெய் போ-யாங் என்ற பெயர் கொண்டவரும் ஒருவராக இருக்கலாம் என்று கருதுகின்றேன். அந்த இருவர் கூறியிருக்கும் கருத்துகளும் போகர் சித்தர் கூறும் கருத்துகளும் ஒத்ததாக உள்ளன.

போகர் சித்தர் பாடியுள்ள பாடல்களைத் தொகுத்து பல்வேறு தலைப்புகளில் உங்களுக்கு இந்த நூலிலே தருகின்றேன்.

இந்த ஆய்வு ஒரு குறுகிய ஆய்வு என்ற போதும், என்னால் இயன்றவரை போகர் சித்தர் சீனாவில் என்ன செய்தார், அவருடன் இருந்தவர்கள் யார் என்பதைப்பற்றி இந்த நூலிலே உங்களுக்காக தந்துள்ளேன்.

குருவான காலாங்கிநாதர், தோழரான கமலமுனி சித்தர், சீடரான புலிப்பாணி சித்தர் என்ற மூவரைப் பற்றியும், போகர் சித்தர் சீனாவிற்கு சென்றது, அங்கு வாழ்ந்தது அங்கு அவர் கண்ட பெண்களைப் பற்றிக் கூறியது என்ற பல தலைப்புகளில் போகரை பற்றி தெரிவிக்க முயன்றுள்ளேன். சீனர்களுக்கு பல கருவிகளை அறிமுகப்படுத்தியதாகவும் போகர் குறிப்பிடு-கின்றார். அவற்றையும் ஒரு பகுதியில் தந்துள்ளேன்.

இதைத் தவிரவும், பாரம்பரியச் சீன மருத்துவம், நம்முடைய சித்த மருத்துவத்தின் கிளையே என்பதைப் பற்றியும், போ-யாங் என்ற பெயரில் சீனாவில் இருக்கும் பகுதிகளைப் பற்றியும் கொடுக்க முயன்றுள்ளேன்.

இந்த நூலை, ஒரு ஆய்வு நூலாகதான் நான் பார்க்கின்றேன். இது ஒரு முதல் படிதான். இன்னும் போகர் சித்தர் எழுதிய போகர் ஏழாயிரத்தையும் அதற்கு இணையான சீன நூல்களையும் ஆராய்ந்தால், முழுமையான ஆய்வை செய்ததாகக் கொள்ளலாம். இந்த ஆய்வை மேற்படி மற்ற அறிஞர்களும் ஆய்வு செய்ய வேண்டும் என்ற விருப்பத்தையும் இங்கே பதிவு செய்ய விரும்புகின்றேன்.

நாம் சித்தர்களைப் பற்றிப் பேசும் போது, வேடதாரிகளைப் பற்றி மட்டுமே பேசி விட்டு, உண்மையான சித்தர்களின் பாடல்கள் கூறும் கருத்துக்களை ஆராயாமல் விட்டு விட்டோம் என்று எண்ணுகிறேன். சித்த மருத்துவர்கள் மட்டுமே, வழிவழியாக அவர்களின் பாடல்களைப் படித்து, மருந்துகளைத் தயாரித்து, மனித உயிர்களுக்குத் துணை புரிந்து வருகின்றனர்.

சீனாவிலே தரவுகளை மிகவும் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார்கள். லவோ ட்சு அவர்கள் பொது ஆண்டுக்கு 500 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்ததாகத் தரவுகள் உள்ளன. மேலும் வெய் போ-யாங் என்ற பெயருடைய ரசவாதி, பொது ஆண்டிற்கு பின் 145வது வருடத்தில் வாழ்ந்ததாக பதிவுகள்

உள்ளன. இவர்தான் சீனாவிற்கு வெடிமருந்தை அறிமுகப்படுத்தியதாய்த் தெரியவருகிறது. இந்த ரசவாதி போகர் சித்தர் அவர்களின் ஒரு பிறப்பே என்பதை அவர் எழுதிய நூலையும், போகர் சித்தர் எழுதிய தமிழ் நூலையும் ஒப்புமைப்படுத்தி பார்த்தால் உண்மையை வெளிக்கொணரலாம். நம் சித்தர்களின் பலவேறு நூல்களையும் சீனாவில் கிடைக்கும் தரவுகளையும் ஆராய வேண்டும்.

போகர் சித்தர் கூறும் சீனாவிற்குச் சென்று வந்த கருத்துகள், மக்கள் மத்தியில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அதனால்தான் ஆய்வுகளும் செய்யப்படவில்லை என்று நான் எண்ணுகிறேன். போகர் சித்தர் தன் நூலில் கூறி இருப்பதற்கு ஒத்த கருத்துகள், சீனாவில் இருப்பதை நான் இந்த ஆய்வின் மூலம் அறிகிறேன்.

சீனத் தமிழ் தொடர்புகளைப் பற்றி ஆய்வு செய்வதில் பல பகுதிகள் உள்ளன. ரசவாதம், சித்த மருத்துவம், ஜோதிடம், வானியல், அறிவியல் என்ற பல துறைகளிலும் அந்த ஆய்வை நடத்தி, சித்தர்களே சீனாவிற்கு வந்து, சீனர்களுக்கு உழவிலிருந்து தொடங்கி அனைத்தையும் கற்றுத் தந்துள்ளார்கள் என்பதை நிச்சயமாக நிறுவலாம்.



# சீன நாட்டில் போகர் சித்தர்
# (Bhogar in China)



**த**மிழகத்தின் போகர் சித்தர் காலம் கடந்து வாழ்ந்த சித்தர். அவர் பல அரிய ஆற்றல்களைப் பெற்றவர். அதன்மூலம் அவர் உலகிலுள்ள பல இடங்களுக்கும் பறந்து சென்று வாழ்ந்து திரும்பியதாக தன்னுடைய நூல்களில் குறிப்பிட்டுள்ளார். அவர் அங்கு சென்றது மட்டுமல்லாமல் அங்கு வாழ்ந்து அந்த மக்களுக்கு தான் என்னென்ன கற்று தந்தேன் என்பதைப் பற்றியும் தன்னுடைய பாடல்களில் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. அப்படி அவர் பறந்து சென்ற சீன நாட்டைப் பற்றி அவர் என்ன கூறியுள்ளார் என்பதை இந்தப் பகுதி விளக்குகிறது.

தமிழகம் பல சித்தர்கள் வாழ்ந்த இடமாக கருதப்படுகிறது.

சித்தர்கள் என்பவர்கள் சித்தத்தை அடக்கி சித்தி பெற்றவர்கள் என்று நம் நூல்கள் கூறுகின்றன. கடவுளைக் காண முயல்பவர்கள் பக்தர்கள், தெளிந்தவர்கள் சித்தர்கள் என்றும் கூறுவர். அதுமட்டுமல்லாமல், அவர்கள் அறிஞர்களாகவும், சீர்திருத்தவாதிகளாகவும் இருந்துள்ளனர். உலக இயக்கத்தை, இறை ஆற்றலை, உயிர் தத்துவத்தை, அண்டத்தை, அண்ட ரகசியத்தை ஆராய்ந்து அறிந்தவர்கள் என்று நாம் அவர்களின் நூல்கள் மூலமாக தெரிந்து கொள்கின்றோம். இவற்றிற்கும் மேலாக அவர்கள் சித்து வேலை செய்பவர்கள், கூடுவிட்டு கூடு பாயும் தன்மை கொண்டவர்கள் மற்றும் காலத்தைக் கடந்தவர்கள், காலத்தைக் கடந்து வாழ்பவர்கள் என்றும் நூல்கள் குறிப்பிடுகின்றன.

இவை அனைத்தும் போகர் சித்தரிடம் இருந்தன என்பதை நாம் அவருடைய நூல்கள் மூலம் தெரிந்து கொள்கின்றோம். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி தரும் பதினெட்டு சித்தர்கள் பட்டியலில் இடம் பெற்றவர் போகர் சித்தர்.

இவற்றையெல்லாம் நம்புபவர்கள் ஒருபக்கம் இருந்தாலும், இதையெல்லாம் எப்படி நம்புவது என்று கூறும் மனிதர்களும் ஆய்வாளர்களும் இருக்கின்றார்கள்.

## போகர் சித்தர்

போகர் சித்தர் தன்னுடைய குருவாக காலாங்கிநாதர் என்பவரை குறிப்பிடுகின்றார். அவருக்கு குருவாக திருமூலர்

இருந்தார் என்பதையும் குறிப்பிடுகின்றார். போகர் சித்தர் தன்னுடன் இருந்த சித்தர்கள் பலரையும் தன்னுடைய பாடல்கள் மூலம் அறிமுகப்படுத்துகிறார். அதில் கொங்கணவர், சட்டைமுனி, இடைக்காடர், கருவூரார், சுந்தரானந்தர், மச்சமுனி, புலிப்பாணி மற்றும் கமலமுனி ஆகியோர் அடங்குவர். இதற்கு அப்பாற்பட்டு அவருக்கு பல மாணவர்கள் இருந்திருக்கின்றனர்.

போகர் சித்தரின் சித்து வேலைகள் என்று நாம் பார்க்கும் போது அவர் சிங்கம், பூனை, பசுவிற்கு உபதேசம் தந்தவர் என்ற கதைகளும் உண்டு. அத்துடன் அவர் சாதாரண உலோகங்களை தங்கமாக மாற்றிய கதைகளும் உண்டு. அவர் தான் சாகாவரம் தரும் காயகல்பம் செய்து, அதை உண்டு, சாகாவரம் பெற்றவராக இருந்ததையும் பாடல்கள் மூலம் தெரிவிக்கின்றார்.

போகர் சித்தரின் பன்முகத்தன்மையை கூற வேண்டுமென்றால் அவர் ஒரு மருத்துவர், கணித மேதை, ரசவாதி, தத்துவஞானி, இலக்கியவாதி, ஆன்மீகவாதி, விஞ்ஞானி என்றெல்லாம் கூறலாம். இந்த அத்தனை தன்மைகளையும் அவர் எழுதிய பல நூல்களின் மூலமாக நாம் அறிகின்றோம். அதில் போகர் 7000 என்ற நூல் ஏழு காண்டங்களாகத் தரப்பட்டுள்ளது. அதிலிருந்துதான் அவர் சீனாவில் என்ன செய்தார் என்பதை இந்தப் பகுதி விளக்கியுள்ளது.

போகர் சித்தர் தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் பல கருத்துகளை தெரிவித்துள்ளார். அதிலே அறிவியல், மருத்துவம், ஆன்மிகம் என்று அனைத்தும் உள்ளன.

இந்த ஆய்வு போகர் ஏழாயிரத்தில் இருந்து பெறப்பட்ட பாடல்கள் மூலம் எழுதப்பட்டுள்ளது. அவருடைய நூலில் சீனாவைப் பற்றி என்னவெல்லாம் கூறி இருக்கின்றார் என்பதை, சீனபதி, சீனதேசம் என்ற சொற்களை, தேடு தளம் மூலமாக தேடிய போது, பல நூறு பாடல்கள் கிடைத்தன. அதில் குறிப்பிட்ட சில பாடல்கள் மட்டும் இங்கு தரப்பட்டுள்ளன.

போகர் சித்தர் சீனாவிற்குச் சென்று, வாழ்ந்து, பெயர் பெற்றுத் திரும்பியதை இந்தப் பகுதி விளக்குகிறது.

## காலாங்கி நாதர் மைந்தனாக போகர் சித்தர்

போகர் சித்தர் தன்னை காலாங்கி நாதரின் மைந்தனாக குறிப்பிடுகின்றார். பல பாடல்களில் அதை அவர் பலமுறை குறிப்பிடுகின்றார். தன்னை ஈன்ற காலாங்கிநாதர், தன்னுடைய தந்தை காலாங்கிநாதர் மற்றும் தான் காலாங்கிநாதரின் மைந்தன் என்று பல வழிகளில் அதை தெரிவிக்கின்றார். தான் காலாங்கி நாதரின் சமாதி முன் வணங்கி பல செயல்களைச் செய்ததாகவும் குறிப்பிடுகின்றார்.

எனை***யீன்ற*** ஆயர் காலாங்கிநாதர் ***(39)***

தன்றாரே ***தந்தை*** காலாங்கிநாதர் ***(98)***

தாட்டையிலே காலாங்கி ***மைந்தன்*** போகர் ***(953)***

***சீனபதியிற்சென்று*** தோற்றமுடன் காலாங்கிநாதர்
பக்கம் வேணபடி சமாதிமுகந்தானிருந்து ***(992)***

## போகர் சித்தர் சீனாவிற்கு சென்றது

காலாங்கிநாதர் அழைத்துதான், தான் சீனாவிற்குச் சென்றதாகவும் பாடல்களில் எழுதியுள்ளார். அங்கு அவர் பல செயல்களைச் செய்துள்ளார். அதைச் செய்ய காலாங்கிநாதரின் அருள் ஆசி கிட்டியதையும் பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

***சீனதேசம் யானும்சென்று*** பாடினேன்
போகரிசி புகலுவேனே ***(6)***

***ஏகினேன் சீனமென்ற பதிக்கு***மைந்தா
யெழிலான குளிகைகொண்டு பறந்தேனப்பா ***(1799)***

## காலாங்கிநாதர் போகர் சித்தருக்கு உபதேசித்தல்

அப்படிச் சொல்லும்போது, காலாங்கி நாதர் போகர்

சித்தருக்கு உபதேசித்ததை, அதுவும் சீனாவில் அவரது உபதேசத்தை பெற்றார் என்பதையும் குறிப்பிடுகின்றார்.

கோனான எனதையர் காலாங்கிநாதர்
கொற்றவனார் ***சீனபதி தேசந்தன்னில்***
மானான வையகத்து மகிமையெல்லாம்
மார்க்கமுடன் எந்தனுக்கு ***உபதேசித்தார்*** **(6992)**

## போகர் சித்தர் சீனாவிற்கு சென்று வாழ்ந்தது

அப்படி உபதேசம் பெற்றவர் சீனாவிலேயே வாழ்ந்ததை பற்றியும் பல பாடல்கள் மூலம் குறிப்பிடுகின்றார். அதிலே இங்கே இரண்டு பாடல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

சீனபதி தன்னில்யானும் ***வெகுகாலம் நானிருந்தேன்*** **(1780)**

பருதியெனும் குளிகைதனைப் பூண்டுகொண்டு
பறந்தேனே ***சீனபதிக்***கடலோரந்தான்
உருதியுடன் அப்பதியில் இறங்கியானும்
ஓகோகோ ***வெகுகாலம் இருந்திட்டேனே*** **(2719)**

## போகர் சித்தர் சீனர்களுக்கு கற்றுத் தந்தது

சீனாவில் போகர் சித்தர் வாழ்ந்தது மட்டுமல்லாமல், தான் அறிந்த வித்தைகளை பலமுறை பலருக்கு கற்றுத் தந்ததாகவும் குறிப்பிடுகின்றார். அவர் பலவிதமான சித்து வித்தைகளையும், அறிவியல் சார்ந்த பல பொருட்கள் பற்றியும், ஆய்வுகளைப் பற்றியும் அவர்களுக்குக் கற்றுத் தந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

பண்டிட்ட சீனபதிவந்து சேர்ந்து
பலபலவாம் வித்தைகளைக் ***கற்பித்தேனே*** **(1522)**

சீனபதியோர்கள் ***மெச்ச புகட்டினேன்***
வினோதமென்ற வித்தைத்தானே **(1778)**

செப்பினரெந்தனுக்கு காலாங்கிதாமும் தேற்றமுடன்
வளப்பமெல்லாம் கண்டுகொண்டேன்

ஒப்பமுடன் வமிர்தரச குளிகைசெய்து
ஒழுங்குபெற சீனபதி மாந்தருக்கு
***தப்பிதங்கள் இல்லாமல்*** முடித்துயானும்
சார்புடனே தந்துவிட்டேன் மைந்தாகேளு
நெப்பமுடன் வெள்ளையென்ற மாந்தருக்கு
நேர்புடனே ***கற்பித்தேன் கோடிதானே*** **(1949)**

## போகர் சித்தர் சீனாவிற்கு சென்று கீர்த்தி பெற்றது

தான் சீனாவில் வாழ்ந்ததோடு மட்டுமல்லாமல், அங்கு மக்கள் மனதில் இடம் பெற்றதையும் அவர் குறிப்பிடுகின்றார்.

திறமான வித்தைகளை ***சீனந்தன்னில்***
தெளிவாகச் செய்துமல்லோ ***கீர்த்திபெற்றேன்*** **(1279)**

சின்மதிலே யானுமிந்த வித்தை தன்னைச்
***சீனபதிசென்று செய்துகீர்த்திபெற்றேன்*** **(1287)**

## போகர் சித்தர் சீனம் விட்டு தமிழகம் திரும்பியது

தான் அங்கு வாழ்ந்து பிறகு, தமிழகம் திரும்பியதைப் பற்றியும் ஒரு பாடல் மூலம் விளக்குகின்றார்.

பிழைக்கவென்று சீனபதிசென்று மேதான்பிழை
மோசம்நேராமல் கருவாய்கண்டு
தழைக்கவே தாரிணியில் பிழைக்கவென்று
தடுமாற்றம் வாராமல் மைந்தாயானும்
பழக்கமுடன் கிட்டிருந்து தொண்டுசெய்து
பலகாலுங் கைமறைப்பை பழுதாராய்ந்து
வழக்கத்துடன் ***சீனம்விட்டு வந்தேனே***
தெட்சணத்தில் பாதைதாமே **(1572)**

## அகத்தியர் போகரை பற்றிக் கூறியது

போகர் சித்தர் தன்னைப் பற்றி கூறியதை இதுவரை பார்த்தோம். அவரைப் பற்றி அகத்திய முனிவர் தன்னுடைய

அகத்தியர் பனிரெண்டாயிரம் நூலில், நான்காம் காண்டம் ஒன்றில் குறிப்பிட்டிருப்பது போகர் சித்தர் கூறிய விஷயங்கள் உண்மை என்பதை குறிக்க ஒரு சான்றாக அமைகின்றது.

பாரேதான் ***சீனபதி***வெள்ளை மாண்பர்
பாருலகில் ***போகருட மரபென்பார்கள்***
நேரேதான் பதினெட்டு வெள்ளை மாண்பர்
நேடிதான பூவுலகில் வாழ்ந்தாரப்பா

**(எஸ்.பி. இராச்சந்திரன்-சித்தர்கள் வரலாறு நூலில் இருந்து)**

## சீனாவில் போகர் சித்தர் மரபு

முந்தைய ஆய்வாளர்கள், போகர் சித்தர் சீனாவில் வாழ்ந்த தவோ மதத்தைத் தோற்றுவித்த *லவோ ட்சு* என்று கருதுகின்றனர். இன்று தவோ மதத்தைப் பின்பற்றுவோர் அனைவரும் போகர் சித்தர் மரபு வந்தவர்கள் என்று கூறலாம். தவோ மதக் கூறுகள் அனைத்தும் போகர் சித்தரின் பாடல்களில் இருப்பது அதைத் தெளிவுபடுத்துகிறது. தமிழகத்தின் நாட்டார் சமயத்தின் பல அம்சங்கள், தவோ மதத்தின் கூறுகளாக உள்ளன.

இப்படி, அதற்கான சான்றாதாரங்கள் பலவும் கிடைக்கப் பெற்றதால், இந்தப் பகுதி எழுதப்பட்டுள்ளது.

மேலும், தற்போது எப்படி தொழிலுக்காக அடிக்கடி மாந்தர்கள் இந்தியாவிற்கும் பிற நாடுகளுக்குச் சென்று திரும்புகின்றனரோ, அதே போல் போகர் சித்தரும் சீனாவிற்கு அடிக்கடி சென்று திரும்பியதை அவரது பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. சீனாவில் லவோ ட்சு அவர்கள் பல பிறப்புகளைக் கொண்டதாக நம்புகின்றனர். போகர் சித்தர் பயணங்கள் ஒவ்வொரு பிறப்பாக இருக்கலாம் என்று நான் கருதுகிறேன்.

இந்தப் பகுதி போகர் சித்தர் எப்படி சீனாவிற்குச் சென்று, உபதேசம் பெற்று, வாழ்ந்து, அங்குள்ள மக்களிடம் நற்பெயரை பெற்று வாழ்ந்து திரும்பினார் என்பதை விளக்கியுள்ளது. போகர் சித்தரைப் பற்றிய மேலும் ஆய்வுகள் பலப்பல சான்றுகளையும் பொருண்மைகளையும் வெளிக்கொணரும் என்று நம்பலாம்.

✦✦✦

# போகர் சித்தரின் சீன வாழ்க்கை
# (Life of Bhogar in China)

**த**மிழகத்தில் வாழ்ந்த சித்தர்களில் ஒருவர் போகர் சித்தர். இவர் சீனாவில் வாழ்ந்ததாகத் தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் பல இடங்களில் கூறியுள்ளார். அப்படி அவர் கூறிய விளக்கங்கள் பலவற்றையும் தேடி ஆராய்ந்து, அதை கோர்வைப்படுத்தி அவர் சீனாவுக்கு சென்ற காரணம், சென்றது, அங்கே கண்டது, அந்த மக்களுக்கு கற்பித்தது மற்றும் அந்த நாட்டின் சிறப்புகளைக் கூறியது என்ற விவரங்களை இந்தப் பகுதி வழங்குகிறது.

**த**மிழகம் பல சித்தர்களைக் கண்டிருக்கிறது. அந்தச் சித்தர்கள் பல நூல்கள் மூலம் தாங்கள் வாழ்ந்த வரலாற்றையும், செய்தச் செயல்களையும், மனித இனத்திற்குத் தேவையான மருந்துகளைப் பற்றிய விவரங்களையும் நமக்கு அறிய கொடுத்திருக்கிறார்கள். அப்படி எழுதப்பட்ட நூல்களில், போகர் சித்தர் எழுதிய போகர் 7000 ஒரு நூல். இந்த நூலில் ஏழு காண்டங்களில் ஆயிரம் பாடல்கள் என்று பல விளக்கங்களை அளித்துள்ளார்.

அதில் அவர் மருத்துவக் குறிப்புகள் மட்டுமல்லாமல், தான் சீன தேசம் சென்றதைப்பற்றியும், பல முனிவர்களை சந்தித்ததை பற்றியும் பல இடங்களில் விரிவாகக் கூறியுள்ளார். அதில் அவர் சீனாவுக்கு சென்றது, வாழ்ந்தது, திரும்பி வந்தது போன்ற செய்திகள் அனைத்து காண்டங்களிலும் விரவிக் கிடக்கின்றன. அவற்றை ஆய்ந்து படிப்போர்க்கு விளங்கும் வண்ணம் முறைப்படுத்தி இந்தப் பகுதி வழங்குகிறது.

இந்த ஆய்வு போகர் ஏழாயிரத்தில் இருந்து பெறப்பட்ட பாடல்கள் மூலம் எழுதப்பட்டுள்ளது.

போகர் சித்தர் தன்னுடைய நூலில் சீனாவைப் பற்றிய குறிப்புகளை ‘சீனம்’, ‘சீன தேசம்’, ‘சீன மாந்தர்க்கு’, ‘சீனபதி’ போன்ற பல சொற்களைப் பயன்படுத்தி கொடுத்துள்ளார். அவற்றைத் தேடுதளம் மூலமாகக் கண்டறிந்து அதில் கூறப்பட்டிருக்கும் செய்தியை, பாடல்களை எடுத்து, இந்தப் பகுதி தருகிறது. போகர் சித்தரின் சீன வாழ்க்கைப் பற்றிய

பல நூறு பாடல்கள் கிடைத்தன. அதில் குறிப்பிட்ட சில பாடல்கள் மட்டும் இங்கு தரப்பட்டுள்ளன.

## சீன நாட்டில் போகர் சித்தர்

சீன நாட்டில் போகர் சித்தர் தான் வாழ்ந்த விவரங்களை வரிசைக்கிரமமாக தந்திருப்பார் என்று எண்ணலாம். ஆயினும் படிப்போரின் ஆர்வம் கருதிச் சில தலைப்புகளின் கீழ் அந்த விளக்கங்களை இந்தப் பகுதி தருகிறது.

## போகர் சித்தர் சீனாவிற்கு செல்ல வாய்ப்பு

போகர் சித்தர் தான் சீனாவிற்கு செல்லும் வாய்ப்பு எப்படி கிடைத்தது என்று ஒரு பாடலில் கூறுகின்றார். தன்னுடைய குருவான காலாங்கிநாதர் சீனாவில் இருந்ததாகவும், அவருடைய பணியைத் தொடர தன்னை போகச் சொன்னதாகவும், அதனால் தான் சீனபதி சென்றதாகவும் கூறுகிறார்.

சொந்தமுடன் உபதேசம் மிகவுங்கூறி
சூட்சாதி சூட்சமெல்லாம் தெளிவுரைத்து
எந்தனுக்கு மாற்றமென்ற மைகொடுத்து
***எழிலாக சீனபதி போமென்றாரே*** **(4043)**

## போகர் சித்தர் சீனாவிற்குச் சென்றது

அன்றைய காலங்களில் விமானங்கள் இல்லாத போதும் சித்தர்கள் தாங்கள் விருப்பப்பட்ட போது, பறந்து பல தேசங்களுக்கு சென்று வந்ததை இந்த நூல் மூலம் நாம் அறிகிறோம். அதன் காரணமாக, போகர் சித்தர் காலாங்கி நாதரின் அனுமதி கிடைத்ததும், அவரிடம் விடைபெற்று, குளிகை ஒன்றை பூண்டு, சீன தேசத்திற்கு சென்றதாகச் சொல்கிறார். அங்கே சென்று அங்குள்ள மக்களுக்கு தான் பெற்ற அறிவைத் தந்தேன் என்றும் குறிப்பிடுகிறார்.

***என்றவுடன் காலாங்கி நாதர்தம்மை***
***எழிலாக தானினைத்து சீனம்போக***
சென்றுமே குளிகைகொண்டு வடியேன்தானும்
***சிறப்புடனே சீனபதிவந்தேன்யானும்***
மூன்றுமே தானடந்த சேதியெல்லாம்
முனையான சீனபதிமாந்தார்க்கு
நன்றாக தானுரைத்தேன் அடியேன்தானும்
நலமுடனே மனக்களிப்பு கொண்டார்பாரே **(4044)**

தந்தாரே போகரிசிநாதருக்கு சாங்கமுடன்
காலாங்கிநாதர்தாமும்
விந்தையுடன் விடையதுவும்
பெற்றுக்கொண்டு வேதாந்த போகரிசி
என்றேனே யடியேனும் மனதுவந்து
எழிலாகக் ***குளிகையது பூண்டு***கொண்டு
***சென்றேனே சீனபதி தேசந்தன்னில்***
***சிறப்புடனே வதிசயங்களெல்லாஞ் சொன்னேன்***
குன்றான நாகமலைத் தன்னைக்காண
கொற்றவனே மனதுவந்து குளிகைபூண்டு
சென்றேனே வாகாசந்தான்பறந்து
செம்மலுடன் வுச்சிமுகங் கண்டிட்டேனே **(4791)**

போகர் சித்தர் ஒருமுறை அல்ல, இருமுறை அல்ல, பலமுறை சீன தேசத்திற்கு சென்று வந்ததை பல பாடல்களில் தெரிவிக்கின்றார். அந்தப் பாடல்களை கீழே காணலாம்.

எடுத்திட்டு குளிகைதனைக் கொண்டுயானும்
***ஏகினேன் சீனபதியமர்ந்திட்டேனே*** **(1290)**

சித்தருடவரம்பெற்று திரும்பியானும்
***சென்றேனே சீனபதிதேசந்தன்னில்*** **(1272)**

விசுவாச மருளும்பெற்று அப்பனே
*சீனபதி யமர்ந்திட்டேனே* (1745)

அவர் ஒரு முறை தான் வாழ்க்கையில் பிழைப்பதற்காக சீன பதிக்குச் சென்றேன் என்று குறிப்பிடுகிறார்.

*பிழைக்கவென்று சீனபதிசென்று மேதான்* (1572)

## போகர் சித்தர் சீனாவில் கண்ட முதற்காட்சி

முதன்முதலில் சீனாவிற்குச் சென்ற போது அவர் என்ன கண்டார் என்பதை ஒரு பாடல் மூலம் அழகாக விவரிக்கின்றார். குளிகையை கொண்டு சீனபதிக்குச் சென்று அங்கே மகிழ்ச்சியுடன் இறங்கி பார்த்தபோது, அங்கே வெள்ளை நிற மனிதர்கள் இருந்ததைக் கண்டேன்; அத்துடன் அங்கு பெண்களையும் கண்டேன் என்று குறிப்பிடுகிறார். இன்னொரு முறை, மற்றொரு பாடலில், அங்கே சென்று இறங்கிய போது அவருடைய சீடர்கள் எல்லாம் அவரை வந்து கண்டனர் என்று கூறுகிறார்.

புகன்றிட்டா ரின்னமொரு கருமானங்கேள்
புகழான போகரிசி கீர்த்திமார்க்கம்
தகன்றிட்ட ***சீனபதிசென்று***யானும் தாழ்வாக
குளிகைகொண்டு பூமிதன்னில்
மகின்றிட்டுயானும் அங்கேயிறங்கி
பார்த்தேன்மனிதருட நிறந்தானு மேகவெள்ளை
***பகின்றிட்ட நிறமதுதான் வெள்ளையாக***
***கண்டேனே பெண்களுட ரூபந்தானே*** (1652)

ஏகவே ***சீனபதிப்***போகவென்று எழிலான
***குளிகைதனைப்பூண்டு***கொண்டு
வேகமுடன் சீனபதிவந்தேன்யானும் வெட்டவெளி
ஆகாயங்கோட்டைதன்னில்

சாகமுடன் குளிகையிட்டு இறங்கியேதான்
*சட்டமுடன் மாண்பரெல்லாங் கண்டேன்யானும்*
*சோகமுடன் சீடவர்க்கங்கண்டபோது*
*சுத்தியெனை வந்துமல்லோ சூழ்ந்தார்பாரே* *(4140)*

## போகர் சித்தர் சீனாவில் வாழ்ந்த காலம்

போகர் சித்தர் சீனாவில் எத்தனை காலம் வாழ்ந்தார்? அதைப் பற்றியும் அவர் தன்னுடைய பாடல்களில் தெரிவிக்கின்றார். அவர் பலமுறை சீனாவிற்குச் சென்றதை இந்தப் பாடல்கள் மூலம் நாம் அறியலாம். சில சமயங்களில் சில காலமே இருந்ததாகவும், சில சமயங்களில் வெகுகாலம் இருந்ததாகவும் தன்னுடைய பாடல்கள் மூலம் வெளியிடுகிறார்.

நடந்தேனே சீனபதி நாடிவந்தேன்
நானங்கே ***சிலகால***மிருந்துபார்த்தேன் *(1269)*

செய்தபின்பு வடியேனுஞ் சீனந்தன்னில்
சிறப்புடனே ***சிலகால*** மிருந்தேனப்பா *(1769)*

விரித்துமே சீனபதிதன்னில் யானும்
***வெகுகாலம்*** நானிருந்தேன் மைந்தாகேளு *(1780)*

பருதியெனும் குளிகைதனைப் பூண்டுகொண்டு
பறந்தேனே சீனபதிக்கடலோரந்தான்
உருதியுடன் அப்பதியில் இறங்கியானும்
ஓகோகோ ***வெகுகாலம்*** இருந்திட்டேனே *(2719)*

சீனாவில் இருந்த போது அரசரிடம் சென்று வித்தைகளை செய்து காட்டியதாக ஒரு பாடலில் கூறுகின்றார்.

கொள்ளவே சீனபதி பெண்களுக்கு
கொட்டினேன் ஈடுவகை யனேகமுண்டு

மெள்ளவே குளிகைகொண்டு யானுமல்லோ
　　　மேதினியில் எழுகடலுஞ் சுத்திவந்தேன்
தெள்ளவேபுலிப்பாணி மைந்தாகேளு
　　***தேர்வேந்த ராஜரிடம் சென்றுயானும்***
வள்ளலாம் வித்தையது சிமிட்டுவித்தை
　　வரைகோடி திரைகோடி கறைகண்டேனே　　***(5511)***

சீனாவில் வாழ்ந்த போது தன்னுடைய குருவான காலாங்கிநாதரை சதாகாலம் தரிசித்ததாக கூறுகின்றார். இப்பாடல் வரிகள் மூலம் அவர் காலாங்கிநாதருடன் தங்கி அவரை தினம் தினம் பணிந்து தரிசித்ததாகவும் கொள்ளலாம்.

திகைத்ததொரு நூல்களெல்லாம் உளவாராய்ந்து
　　***தீர்க்கமுடன் காலாங்கிப் பதம்பணிந்து***
பகைத்தொரு சித்தர்களைக் கரங்குவித்து
　　பட்சமுடன் அஞ்சசிகள் மிகவுஞ்செய்து
வகையுடனே குளிகையது பூண்டுமல்லோ
　　வளமான சீனபதி அடியேன்சென்று
தகமையுடன் குருபரனார் பதாம்புயத்தை
　　தாள்பணிந்து சதாகாலந் தரிசித்தேனே　　***(6686)***

## போகர் சித்தர் சீனாவில் கண்டவை

சீனா எப்படி இருந்தது என்று சொல்லும் போது, அங்கு அந்தக் காலத்திலேயே எந்தவொரு தொழிலையும் செய்வதற்கு வசதியான தேசம் என்று அவர் கூறி இருப்பதைக் குறிப்பிடுகின்றார்.

பணியான தேசமது சீனமார்க்கம்
　　***பான்மையுடன் எத்தொழிலுஞ் செய்வதற்கு***
தோனியான தேசமென்று　　***(2378)***

## போகர் சித்தர் சீனர்களுக்காகப் பாடல்கள் எழுதியது

அவர்களுக்காக பல பாடல்களை பாடியதாகவும் பல பாடல்களில் குறிப்பிடுகின்றார். ஏழு காண்டங்களில் எல்லாவற்றையும் வெளிப்படையாக ஒரு சிறு துரும்பு முதற்கொண்டு விடாமல் சீனர்களுக்கு துப்புரவாய் உரைத்ததாக ஒரு பாடல் கூறுகின்றது.

விரும்பவே காண்டமது ஏழுஞ்சொன்னேன்
வெளியாகக் கருவெல்லாந் துறந்துபோட்டேன்
துரும்புமுத லொளிக்கவில்லை ***சீனத்தார்க்கு***
***துப்புரவாயுரைத்துவிட்டேன்*** ***(2000)***

போகர் சித்தர் சீனாவிற்கு சென்ற போது அவர்களுக்கு பல வித்தைகளைக் கற்றுத் தரும் வகையில் பாடல்களை எழுதியதாக பல பாடல்களிலே குறிப்பிடுகின்றார்.

கூடியே சீனபதி சென்றுயானும் குறிப்புடனே
***பாடிவிட்டேன் மர்மந்தானே*** ***(1589)***

பெருநூலாம் போகரேழாயிந்தான் பெருக்கமுடன்
***பாடிவைத்தேன் சீனத்தார்க்கு*** ***(4124)***

பல சாத்திரங்களை முறையாக தெளிவுபடுத்தி சிக்கல்களை எல்லாம் சிக்கெடுத்து இந்த ஏழாயிரத்தை சீன பதி மாண்பருக்குப் பாடியதாக ஒரு பாடல் கூறுகின்றது.

தேனான சாத்திரத்தின் முறைபாடெல்லாம்
தெளிவுடனே சிக்கருத்து சத்தகாண்டம்
பானான சூரியன்போல் ஏழாயிரந்தான்
***பாடிவைத்தீர் சீனபதிபாண்பருக்கே*** ***(6794)***

## போகர் சித்தர் சீனர்களுக்குக் கற்றுத் தந்தவை

போகர் சித்தர் சீன மக்களுக்கு தான் கற்ற வித்தைகள்

பலவற்றையும் கற்றுத் தந்தேன் என்று பல பாடல்களில் கூறியிருக்கின்றார். அதை அவருடைய மாணாக்கர்கள் மிகவும் மெச்சி கற்றுக் கொண்டார்கள் என்பதையும் கூறுகின்றார்.

வந்திட்டேன் சீனபதிதன்னிற்சென்றேன்
வாகுடனே கற்றதொருவித்தையெல்லாம்
***தந்திட்டேன் மாணாக்கள் பிழைக்கவென்று***
தாரணியி லெந்தனைமெச்சியேதான்
குந்திட்டேன் சீனபதிமார்க்கமெல்லாம்
குறிப்புடனே சாலமிகச்செய்தேன்யானும்
முந்திட்ட தேசாதிதேசமெல்லாம் முயற்சியுடன்றான்
திரிந்து வந்தேன்பாரே ***(1367)***

காலாங்கிநாதர் மற்றும் பிற முனிவர்களிடம் கற்ற வித்தைகளை எல்லாம் எந்தப் பிழையும் இல்லாமல் தன்னுடைய மாணவர்கள் பிழைக்கவென்று முழுமையாக, அனைத்து வித்தைகளையும் முயற்சியுடன் அவர்களுக்கு கற்பித்ததாகச் சொல்லும் பாடல் குறிப்பிடத்தக்கது.

தொழுதிட்ட யெந்தனுக்கு முனிதான்
சொன்னார் தொல்லுலகில் நீர்கற்றவித்தைதன்னை
பழுத்திட்ட மில்லாமல் ***சீனந்தன்னில்***
***பட்சமுடன் மாணாக்கள்பிழைக்கவென்று***
முழுதிட்டந் தன்னுடனே முனிதானசொல்ல
முயற்சியுடன் கற்றவித்தை பழுதில்லாமல்
***வழுதிட்டமுடன் றானுமறைப்பையெல்லா***
***மாணிடத்தில் கொட்டிவிட்டேன் வண்மைபாரே (1480)***

ஆடினார் ***சீனமென்ற தேசந்தன்னில்***
***அன்புடனே மாணாக்கள் பிழைக்கவென்று***
பாடினார் சித்தர்முனி சொன்னநூலைப்
பரிவாகத் தானெடுத்து பாருவோர்க்கு

***மூடினதோர் வுளமெல்லாம்*** மிகவேபார்த்து
முயற்சியுடன் வெளியங்கமாகச்செய்தேன்
கூடினதோர் கருமான மெல்லாந் தேர்ந்து
குறிகண்டு நிலைகண்டார் சீனத்தாரே *(1518)*

மறைத்து வைக்கப்பட்ட பல விளக்கங்களையும் அவர்களுக்கு வெளிப்படையாக தான் கற்றுக் கொடுத்ததை ஒரு பாடலில் தெரிவிக்கின்றார்.

***க***ண்டிட்டே னவர்களிடம் வாதுபேசி
கருவான மறைப்புமுதல் திறப்புங்கேட்டேன்
விண்டிட்ட சாத்திரங்கள் கற்றோர்போல
வீண்வார்த்தை பேசியல்லோ பொய்யேசொன்னார்
தண்டிட்டு வவர்களிடம் துஞ்சிப்பேசி
தூரான மாராட்டப் பேச்சரிந்து
பண்டிட்ட சீனபதிவந்துசேர்ந்து பலபலவாம்
***வித்தைகளைக் கற்பித்தேனே*** *(1522)*

பல முனிவர்கள் தன்னிடமுள்ள வித்தைகளை அடுத்தவருக்கு கற்றுத் தராமல் வைத்திருந்த வித்தைகளை, அவரிடம் பல விதமாகப் பேசி, தான் கற்றதையும், அப்படி கற்ற வித்தைகளை, சீனாவுக்குச் சென்று அவர்களுக்கு கற்பித்தேன் என்று ஒரு பாடலில் கூறுகின்றார்.

அறிந்திட்டேன் வெள்ளியென்ற மலையுங்கண்டேன் அப்பனே
செம்பினுட மலையுங் கண்டேன்
பிரிந்திட்டேன் மேருகிரி தன்னிற்சென்றேன்
ரோமரிசிகள் முனிசித்தர்தம்மை
பரிந்திட்டு யவர்களிடம் சென்றுபேசி
***பலபலவாஞ் சாத்திரங்கள் மறைத்ததெல்லாம்***
***குறித்திட்டு வெளியாக்க வென்றயெண்ணி***
***குளிகையிட்டு சீனபதி யமர்ந்திட்டேனே*** *(1244)*

திருவருளைப் பெற்ற போகர் சித்தர் சீனத்திற்குச் சென்று அங்கேயே சிலகாலம் இருந்து தான் கற்ற வித்தையை சரிபார்த்து, தேவதைகளுக்கு ஒப்பான மாந்தர்களாக குறிப்பிடப்படும் சீனர்களுக்கு, அதீத வித்தையையும் சித்து என்ற மர்மத்தையும் புகட்டி, அவர்களுடைய இருள் அகல போதித்ததாக ஒரு பாடல் கூறுகின்றது.

அருள்பெற்று போகருமே சீனஞ்சென்று
அங்ஙனவே போயிருந்து சிலதுகாலம்
தெருளுடனே வித்தையெல்லாம் செய்துபார்த்து
தேவதைக்கொப்பான மாந்தருக்கு
***பொருளுடைய கருவான வதீதவித்தைப்***
***புகட்டினார் சீனமென்ற மாந்தருக்கு***
இருளகல போதித்து போகர்தாமும்
யெப்போதும் போலாகபறந்திட்டாரே *(1755)*

நோட்டமுடன் ***சீனபதிதேசத்தார்க்கு நுணக்கமுள்ள***
வதீதமென்ற வித்தைதன்னை
தோட்டமுடன் வுளவுமுதலெல்லாஞ் சொல்லி
***தேசத்தில் சித்துவென்ற மர்மந்தன்னை***
***காட்டியே விட்டதொரு*** வண்மையெல்லாம்
கண்டாரே யாமானால் சபிப்பார்காணே *(2286)*

மற்றொரு முறை, குளிகை பூண்டு, சீனபதிக்கு சென்றபோது அங்கிருக்கும் வெள்ளை நிறத்து மாந்தர்களுக்கு கருவிகரணாதி எல்லாம் உபதேசம் செய்தேன் என்று பாடல்களில் குறிப்பிடுகின்றார்.

திரியென்ற போதையிலே விடையும்பெற்று
திரும்பினேன் சீனபதிகுளிகைபூண்டு
நெரியென்ற சத்தியத்தை கைவிடாத
நேர்பான வெள்ளையென்ற மாந்தர்முன்னே

***பரியென்ற கருவிகரணாதியெல்லாம்***
***பாங்குடனே வுபதேசம் செய்தேன்யானும்***
சரியென்று யெந்தனையு மாசீர்மித்து
சாட்டாங்க நமஸ்காரம் செய்திட்டாரே *(1768)*

மகிழவே யடியேனும் விடைகள்பெற்று
மார்க்கமுடன் வெள்ளையென்ற மனிதர்பக்கம்
நெகிழவே போயிருந்து யாவுஞ்சொன்னேன்
***நெடிதான கருவிகரணாதியெல்லாம்***
மகிழவே முடித்திட்டேன் தலைகீழாகச்
சதாகாலம் வெள்ளையென்ற மனிதருக்கு
புகழவே சீனபதியோர்கள் மெச்ச புகட்டினேன்
வினோமமென்ற வித்தைதானே *(1778)*

ஒரு பாடலிலே பிரணவத்தின் சூட்சுமத்தையும் தான் சீனத்தாருக்குக் கற்றுத் தந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

கருதினார் அடியேனுங் கண்டாராய்ந்து
காசினியில் மானிடர்கள் அறியவேண்டி
***சுருதியென்னும் பிரணவத்தைச் சீனத்தார்க்கு***
***சூட்சமுடன் காட்டவென்று அடியேன்தானும்***
பருதியெனும் குளிகைதனைப் பூண்டுகொண்டு
பறந்தேனே சீனபதிக்கடலோரந்தான் *(2719)*

போகர் சித்தர் ஒரு ரசவாதி. அப்படி பல ரசவாத குறிப்புகளை தன்னுடைய போகர் ஏழாயிரத்தில் குறிப்பிடும்போது, சீனத்தார்க்கும் அந்த ரசவாதத்தினால் கிடைக்கும் செந்தூரத்தின் போக்கை உரைத்தேன் என்று ஒரு பாடலில் தெரிவிக்கின்றார்.

தானான செந்தூரம் அருணன்போலாம்
தாக்கான பிரகாசமான ஜோதி

வேனான கொங்கணவர் செய்தபாகம்
மேதினியில் ஆருந்தான் செய்யவில்லை
கோனான எனதையர் காலாங்கிநாதர்குரு
சொன்னபடி செய்தேன்யானும்
***தேனான செந்தூரப் போக்குதன்னை தேசத்தார்***
***சீனத்தார்க்கு*** உரைத்திட்டேனே *(2833)*

சாகாத தன்மையைக் கொடுக்கும் காயாதி கற்பம் செய்யும் முறையையும் அவர்களுக்கு கற்றுத் தந்ததை ஒரு பாடல் கூறுகிறது.

பண்ணவே காயாதிகற்பவுண்டை பாருலகில்
நாதாக்கள் ரிசிகள்தாமும்
வண்ணமுடன் மாணாக்கள் பிழைக்கவென்று
வாகுடனே ***சீனபதிதேசத்தாற்கு***
திண்ணமுடன் இப்பாகம் செய்துவைத்தேன்
திறமையுடன் ***காயாதிகற்பந்தன்னை***
நண்ணமுடன் வுண்டுமல்லோ மாந்தர்தாமும்
மானிலத்தில் சித்தரைப்போ லிருந்திட்டாரே *(2855)*

அணியணியாய் வந்த சீனபதி மக்களுக்கு முத்து மற்றும் பவளம் பற்றிய விவரங்களை கற்றுத் தந்ததாக ஒரு பாடல் கூறுகிறது.

அணியணியாய் சீனபதிமாண்பரெல்லாம்
வன்புடனே எனைவந்துகண்டாரப்பா
துணிவுடனே ***கொண்டுவந்த முத்தையெல்லாம்***
***துப்புறவே சீனத்தார்க்கறியச்சொல்லி*** *(4112)*

இணக்கமுடன் ***பவளமென்ற கடல்***தானப்பா
யெழிலான காட்டகத்தை தாமுறைத்து
கணக்கமது வாராமல் ***சீனத்தார்க்கு***
***சூட்சமதை வெளியிட்டார் போகர்தாமே*** *(4339)*

மேலும் பல ஆச்சரியமான விஷயங்களையும் சிங்கத்தின் அதிசயங்களையும் சீனத்தார்க்குக் கூறியதாக சில பாடல்களில் கூறுகின்றார். சீனாவில் சிங்கம் கிடையாது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

பாச்சலுடன் சீனமெனும் பதியிற்சென்று
பண்பான மாண்பர்களுக்குகந்துயானும்
***ஆச்சரியமானதொரு மகிமையெல்லாம்***
***அன்புடனே யானுரைத்தேன் சீனத்தார்க்கே*** **(4996)**

பாகமுடன் சிங்கத்தின் அதிசயத்தை
பாரினிலே நாதாக்கள் கண்டதில்லை
வேகமுடன் யான்கண்டு சீனத்தார்க்கு
விருப்பமுடன் ***உபதேசஞ் செய்திட்டேனே*** **(6044)**

## போகர் சித்தர் சீனர்களின் சமயம் பற்றி

போகர் சித்தர் சீனாவிற்குச் சென்றபோது, அங்கு மக்கள் பின்பற்றிய சமயத்தைப் பற்றிய விவரங்களையும் அழகாக பாடல்கள் மூலம் விளக்குகிறார். ஒரு பாடலில் அங்கிருக்கும் மக்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைப் பற்றிக் கூறும் போது அவர்களை போன்று இந்த உலகில் யாரும் இல்லை, பெயர் பெற்றவர்களும் இல்லை, கொச்சி என்ற மார்க்கத்தை பின்பற்றுபவர்களாக, தேவரிசிகளுக்கு ஒப்பான மக்கள் இருந்தார்கள் என்றும் கூறுகின்றார். அவர்கள் சைவ மதத்தை பின்பற்றவில்லை என்பதையும் ஒரு பாடல் மூலம் தெரிவிக்கின்றார்.

சீனபதி மானிடர்கள் செய்யுமார்க்கம்
சித்தர்முனி ரிசிதேவத் முறைகளாகும்
மானபதிமாண்பர் கருவாளியல்லோ
மண்டலத்திலாருமில்லை பேருமில்லை

தானமுடன் கொச்சியென்ற மார்க்கத்தாரும்
சட்டமுடன் செய்வார்க ளிவர்போல்
மோனமுடன் தேவதா ரிசிக்கொப்பாவார்
மண்டலத்தில் சீனபதிமாந்தார்தாமே *(1519)*

மைவனங்கள் மெத்தவுண்டு சீனத்தார்க்கு
மகாவிட்ணு கிருட்ணாவதாரமென்பார்
வெய்தவம் பூண்டாலும் சீனத்தார்கள்
விருப்பமுடன் சைவமது யில்லைதானே *(5252)*

## போகர் சித்தர் கூறும் சீனச் சிறப்புகள்

போகர் சித்தர் சீனர்களின் சிறப்புகளை பற்றி கூறும் போது தேவதைக்கு ஒப்பான மாந்தர்கள், தேவரிசிகளுக்கு ஒப்பான மக்கள் என்றும், சீன நாட்டு மக்கள் தெய்வம் என்று யாரையும் வணங்காமல், உத்தமனே கடவுள் என்று எண்ணியதாகவும் மேலும் சீனா, எப்படி பொய், கொலை, களவு இல்லாமல், பாங்காக செயல்களை செய்து கொண்டு, விசுவாசமாக இருக்கும் மக்களைக் கொண்ட நாடாக இருந்ததாக போகர் சித்தர் குறிப்பிடுகின்றார். மேலும் இரண்டு பாடல்களிலே சீன மாந்தரைப் பற்றி மிகவும் அழகாக எடுத்துக் கூறியுள்ளார்.

உண்டான தெய்வமது யாதுமில்லை
வுத்தமனே கடவுளன்றி வேறொன்றில்லை
பாண்மான பொய்கொலைகள் களவுமில்லை
பாங்கான கர்மமது வொன்றேயுண்டு
திண்டான விசுவாச யருளுமுண்டு
திறளான பாவமது யில்லையப்பா
கண்டேனே சீனபதி மார்க்கத்தோரை
காசினியில் காலாங்கி கடாட்சந்தானே *(5183)*

கற்பித்த வித்தைகளும் கணக்கேயில்லை
காலமாடுதலைமாடு பரட்டார்மாண்பர்
துற்புத்தி சற்றேனுமில்லா பாலர்
துறைமுகமும் ஒருமுகங்கண்டதில்லை
விற்புத்தி யானதொருமாண்பரப்பா
விண்ணுலகில் சீனபதிக்கிணையாமோதான்
சற்புத்தியுடையதொரு சித்தர்க்கொப்பாய
***சாற்றலாஞ் சீனபதி தேசத்தோரே*** ***(1523)***

தேசமென்றால் தேசமது சீனமாமோ
ஜெகத்திலே கண்டவர்கள் யாருமில்லை
பாசமென்றால் பிரம்மத்தின் பாசமாகும்
பாருலகில் சதாநித்தம் தொழுவார்மாந்தர்
நேசமென்றால் போகரிசிதன்னைப்போற்றி
நெடுங்காலஞ் சமாதியிலே யிருந்தார்கோடி
வாசமுடன் சீனபதி யாவுங்கண்டேன்
வளமாக மாந்தருட வுண்மைபாரே ***(1524)***

தேசமா மின்னமொரு மார்க்கம்சொல்வேன்
சிறப்பான சீனபதி வுலகத்தார்க்கு
மோசமது தெரியாத மாந்தரப்பா
மூதுலகில் சீனபதியாரைப்போல
பாசமுடன் மெய்யென்று நம்பு
மாண்பர் பாருலகில் சீனபதியுலகமப்பா
நாசமுள்ள மற்றதோர் தேசமெல்லாம்
நலமான கருமிகள்தான் என்னலாமே ***(4170)***

என்னவே சீனபதி யுலகத்தோர்க்கு
எழிலான கபடுகளுஞ் சூதுதானும்
பன்னவே பழிபாவம் தெரியாதப்பா
பாருலகில் அம்மாண்பர் போலேயுண்டோ

துள்ளவே யாம்கண்ட மார்க்கந்தன்னை
துப்புறவாய் சீனபதியுலகத்தார்க்கு
முன்னவே காலாங்கி சொன்னாப்போல
முயற்சியுடன் தானுரைப்பேன் மதியுள்ளோர்க்கே
*(4171)*

## போகர் சித்தர் சீனாவில் பெற்ற சிறப்புகள்

சீன தேசத்தில் வாழ்ந்த போது, தன்னுடைய வித்தைகளைக் கண்ட சீனர்கள் தனக்கு எப்படி புகழ் சேர்த்தார்கள் என்பதை பற்றியும் சில பாடல்களில் விளக்கம் அளிக்கின்றார்.

திறமான வித்தைகளை சீனந்தன்னில் தெளிவாகச்
***செய்துமல்லோ கீர்த்திபெற்றேன்*** *(1279)*

சின்மதிலே யானுமிந்த வித்தை தன்னைச்
***சீனபதிசென்று செய்து கீர்த்திபெற்றேன்*** *(1287)*

## சீன நூல்களில் போகர் சித்தரின் கருத்துகள்

போகர் சித்தர் இவ்வளவு பாடல்களை சீனர்களுக்கு பாடி இருக்கும் போது சீன மொழியில் அந்தப் பாடல்கள் இருக்கின்றதா என்ற சந்தேகம் எழும். சீனாவிலும் பொது ஆண்டிற்கு முன், ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த லவோ ட்சு (Lao Tzu) என்று அழைக்கப்படும் போ-யாங் (Bo-yang) மற்றும் பொது ஆண்டிற்கு பின், இரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் வாழ்ந்த வெய் போ-யாங் (Wei Bo-yang) என்ற நூலாசிரியர்கள் எழுதிய பல நூல்கள் இருக்கின்றன. அவற்றில் போகர் ஏழாயிரத்தில் கூறப்பட்டிருக்கும் ரசவாதம், மேலும் மனிதர்களின் வாழ்க்கை முறைகளும் கூறப்பட்டிருக்கின்றன. அவை ஒத்த கருத்துக்களாகவே தெரிகின்றன. அந்த நூல்களின் ஆய்வு நமக்கு போகர் சித்தர் சீனாவில் வாழ்ந்ததை நிறுவுகிறது என்றே கூறலாம்.

நமக்கு கிடைத்த போகர் 7000 என்ற நூல் எப்போது எழுதப்பட்டது என்று வரையறுத்துக் கூற முடியாது. இவர் குறிக்கும் கருத்துக்கள் பல காலப் போக்கில் சேர்க்கப்பட்டவையாக இருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இந்த நூலில் இருக்கும் கருத்துகள் நிச்சயம் பொது ஆண்டிற்கு முன்னதாக இருக்க வாயப்புகள் உண்டு.

இந்தப் பகுதி போகர் ஏழாயிரம் நூலிலிருந்து போகர் சித்தர் சீனாவிற்கு செல்ல கிட்டிய வாய்ப்பு, அங்கு அவர் சென்று கண்ட முதல் காட்சி, அங்கு சந்தித்த மக்களைப்பற்றி பல பாடல்களின் மூலம் எடுத்துக் கூறியதை விளக்குகின்றது. போகர் சித்தரைப் பற்றிய மேலும் ஆய்வுகள் பலப்பல சான்றுகளையும் பொருண்மைகளையும் வெளிக்கொணரும் என்று நம்பலாம்.



# போகர் சித்தர் கண்ட சீனப் பெண்கள்

## (Chinese Women in the eyes of Bhogar)

**த**மிழகத்தில் வாழ்ந்த சித்தர்களில், நால்வர் சீனாவில் வாழ்ந்ததாகவும் அல்லது சீனாவுக்குச் சென்று வந்ததாகவும் தமிழகத்திலே தமிழ் நூல்களிலே தரவுகள் கிடைத்துள்ளன. அப்படி சென்றவர்களில் போகர் சித்தர் ஒருவர் ஆவார். அவர் சீனாவுக்கு சென்றபோது அங்குள்ள பெண்களின் நிலை குறித்தும், அவர்களுக்கு தான் உபதேசித்தது குறித்தும் பல விவரங்களை தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். அப்படி அவர் கூறிய விவரங்கள் மட்டுமல்லாமல், அதற்கான சீனப் பின்னணியையும் இந்தப் பகுதி எடுத்துக் கூறுகிறது.

**போ**கர் சித்தர் சீனாவிற்குப் பலமுறை சென்று, அங்கு சில காலமும் சிலமுறை வெகு காலமும் வாழ்ந்து வந்ததாக தன்னுடைய போகர் 7000 என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். அப்படி வாழ்ந்த நாட்களில் அவர் அங்கு பலவிதமான மனிதர்களைச் சந்தித்து உள்ளார். அங்கு வாழ்ந்த பெண்களை சந்தித்து, அவர்களுடன் பேசி, அவர்களுக்கு பல அதிசயங்களை கூறி, அவர்களுக்கு மருத்துவ விளக்கங்களை அளித்து, மருந்துகளைக் கொடுத்து வாழ்ந்ததைப் பற்றி பல பாடல்கள் மூலம் வெளிப்படுத்துகிறார். அவற்றை தொகுத்து முறையாக இந்தப் பகுதி வழங்குகிறது.

மேலும், போகர் சித்தர் சீனாவில் இருந்ததற்கான ஆதாரங்களையும் சீன வரலாற்றிலும், தொன்மைக் கதைகளிலும் தேடி, அவற்றையும் தர முயல்கிறது.

இந்தப் பகுதி போகர் ஏழாயிரத்தில் பெறப்பட்ட பாடல்கள் மூலம் எழுதப்பட்டுள்ளது. அவருடைய நூலிலே தேடு தளம் மூலம் தேடி கிடைத்த சீனபதிபெண் (24), சீனபதிமாதர் (4754), சீனத்தோற்கு (4768) சொற்களைக் கொண்டு, அவற்றுடன் உள்ள பல நூறு பாடல்களில் சில குறிப்பிட்ட பாடல்களை கொண்டு இந்தப் பகுதி எழுதப்பட்டுள்ளது.

## சீனப் பெண்கள்

போகர் சித்தர் சீனாவில் வாழ்ந்த காலத்தில் பெண்களுடன் இருந்த தன் அனுபவங்களைப் பல பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார். அங்கு அவர் பெண்ணாக இருந்து

அவர்களுடன் பழகினாரா, அல்லது ஆணாக இருந்து பழகினரா என்ற ஐயம் எழலாம். ஆனால் சீனாவில் இரு பெண்கள், சகோதரிகளாக, தவோ மதத்தையும், ரசவாதத்தையும் பரப்பினார்கள் என்பதற்கான ஆதராரங்கள் உள்ளன. அதன் காரணமாக போகர் சித்தர் பெண்ணாகப் பிறந்து, சீனப் பெண்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து, அவர்களது நலனைக் காக்கும் மருத்துவக் குறிப்புகளைக் கொடுத்துள்ளார் என்பதை அறியலாம்.

## போகர் சித்தர் பெற்ற வரம்

போகர் சித்தர் சீனாவிற்கு சென்றதைப் பற்றி குறிப்பிடும் போது, அங்கு அவர் பெண்களுடன் வாழ வரம் கிடைத்ததாக முதலிலே குறிப்பிடுகின்றார். அவருடைய குரு காலாங்கிநாதர் அவரை சீனப் பெண்களோடு நெடுங்காலம் இருக்க வரம் தந்தார் என்று ஒரு பாடல் வரி மூலம் காட்டுகிறார்.

வாழ்கவென்று காலாங்கிநாதர்தாமும்
வளமான போகரிசிநாதருக்கு
சூழ்கவே ஆசீர்மம் மிகவுங்கூறி
துப்புரவாய் யோகபதி மாண்பனாக
தாழ்வாக வெந்நாளுங் கீர்த்திவானாய்
தாரிணியில் இருக்கவென்று வரமுந்தந்து
நீழ்கவே ***சீனபதிபெண்களோடு***
***நெடுங்காலமிருக்கவென்று வரந்தந்தாரே*** **(4790)**

## போகர் சித்தர் கண்ட சீனப் பெண்கள்

வரம் பெற்ற போகர் சித்தர், சீனபதிக்கு சென்றபோது, அவர் முதன்முதலாக கண்ட காட்சியை கூறியது, மிக அழகாக ஒரு பாடலில் உள்ளது. குளிகைக்கொண்டு பூமியிலே பறந்து சென்று, சீனாவில் இறங்கிய போது, அங்கு வெள்ளை நிற மாந்தர்களையும் பெண்களையும் பார்த்ததாகக்

குறிப்பிடுகின்றார். மேலும் அங்கே சீனபதி பெண்களெல்லாம் மேன்மையுடன் இருப்பதையும் கண்டேன் என்று கூறுகின்றார்.

தகன்றிட்ட ***சீனபதிசென்றுயானும்*** தாழ்வாக
குளிகைகொண்டு பூமிதன்னில்
மகின்றிட்டுயானும் அங்கேயிறங்கி
பார்த்தேன்மனிதருட நிறந்தானு மேகவெள்ளை
பகின்றிட்ட நிறமதுதான் வெள்ளையாக
கண்டேனே ***பெண்களுட ரூபந்தானே*** ***(1652)***

தானான ரூபமது வெண்மைகண்டேன்
தாக்கான தரணியெல்லாம் சுத்திவந்தேன்
கோனான பெண்களெல்லாம் வானபேதம்
குணக்குறிக ளனேகமதாய்த் தோன்றுங்காணும்
வேனான ***சீனபதிப்பெண்களெல்லாம்***
***மேன்மையுடன்தானிருக்கக் கண்டேன்யானும்***
பானான காரமதுபூமிதன்னால் பரங்கியர்க
ளெல்லோரும் வெள்ளைதானே ***(1653)***

குளிகையைக் கொண்டு பல தேசங்களுக்கு சென்று சுற்றியபோதும், சீன தேசத்திற்குச் சென்று அங்கே மங்கையரை கண்டேன் என்று கூறுகின்றார்.

போற்றுவாரென்றுமே பெண்களுக்கு
பொங்கமுடன் தாமுரைப்பார் சீனத்தோற்கு
தேற்றமுடன் குளிகைகொண்டு வெகுதேசங்கள்
திறமையுடன் சுத்திவந்தேன் புத்திமானாய்
ஆற்றவே போகாது ரேணுமாது
வன்பான வல்லமையான் கண்டதில்லை
மாற்றமென்ற மையுடனே யானுஞ்சென்று
***மங்கையரைக் கண்டேனே வெகுவாய்த்தானே (4768)***

## போகர் சித்தர் கூறும் சீனப் பெண்களின் குணங்கள்

போகர் சித்தர் சீனப்பெண்களின் குணங்களைப் பற்றிக் கூறும்போது வையகத்து பெண்களெல்லாம் எழிலான புருஷனை தூசிப்பார்கள், ஆனால் சீனப் பெண்கள் எல்லாம் சிறப்புடனே புருஷனை போற்றுகிறார்கள் என்று கூறுகின்றார். மேலும், சீனபதி பெண்களுக்கு நேர்மையான நெறிமுறை தத்துவங்கள் நிறைய இருக்கின்றது என்றும் கூறுகின்றார்.

ஏர்பையாம் வையகத்துப் பெண்களெல்லாம்
எழிலான புருசனையும் தூசிணிப்பார்
***சேர்வையாம் சீனபதிப்பெண்களெல்லாம்***
***சிறப்புடனே புருசனையும் போற்றுவார்கள்***
பார்வையாங் குளிகையது கொண்டுமல்லோ
பாருலகம் ஏழுகடலுஞ் சுத்திவந்தேன்
***நேர்மையாஞ் சீனபதிப் பெண்களுக்கு***
***நெறிமுறைகள் தத்துவங்கள் மிகவுண்டாமே* (5182)**

## போகர் சித்தர் காலாங்கிநாதரின் சீடராக இருந்து பெண்களுக்கு உபதேசித்தல்

மேலும், அவர் தன்னுடைய குருவான காலாங்கிநாதர் உடன் சேர்ந்து, சீனப் பெண்களுக்கு ஆகம சாஸ்திர புராணங்களை எல்லாம் போதித்ததாகவும் ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார்.

ஏகவே காலாங்கி நாதர்தாமும்
எழிலான சீனபதி தன்னிற்சென்று
பாகமுடன் லோகவதிசயங்களெல்லாம்
பாலித்தார் ***சீனபதிப்பெண்களுக்கு***
***ஆகமசாஸ்திர புராணங்களெல்லாம்***
***அங்ஙனவே போதித்து வினயங்கூறி***

போகரென்ற எந்தனுயும் சீடனாக்கி
பொங்கமுடன் நெடுங்காலம் இருந்திட்டாரே ***(6893)***

## போகர் சித்தர் சீனப் பெண்களுக்கு உபதேசித்தல்

போகர் சித்தர் தான் சீனாவில் வாழ்ந்த காலத்திலே, அங்கிருக்கும் சீனப் பெண்களுக்குச் சாத்திரங்கள், ஜாதி இல்லாமல், தீட்டும் இல்லாமல் இருப்பதைக் கண்டு அவர்களுக்கு உபதேசம் செய்ததைப் பற்றி குறிப்பிடுகின்றார். அவர்களுக்கு சாஸ்திர வழியில் நீலாஞ்சனத்தை நாட்டமுடன் உபதேசித்தேன் என்று குறிப்பிடுகின்றார். அதன் மூலமாக அவர்கள் இறை தரிசனத்தை கண்டனர் என்றும் குறிப்பிடுகின்றார்.

கெட்டாரே மானிலத்தில் மாண்பரெல்லாம்
கீர்த்தியுடன் இந்தவண்ணபாகத்தாலே
சட்டமுடன் ***சீனபதிப் பெண்களுக்கு***
***சாஸ்திரங்கள் ஜாதியில்லை தீட்டுமில்லை***
இட்டமது போலிருந்து போகஞ்செய்து
யெழிலான பிறவிமக்களனேகமுண்டு
அட்டதிசை தான்புகழுஞ் சீனத்தார்க்கு
வன்பான மதியநிலை யதிகந்தானே ***(5282)***

தாமான சாஸ்திரத்தி னுளவுகண்டு
தண்மையுடன் ***சீனபதிப்பெண்களுக்கு***
சாமானமாகவல்லோ குளிகைகொண்டு
சட்டமுடன் சீனபதிக்கேகினேயான்
நாமேதான் சொன்னபடி ***நீலாஞ்சனத்தை***
***நாட்டமுடன் போதித்தேன் மாண்பருக்கு***
வேமேதான் சீனபதிபெண்களெல்லாம்
வேகமுடன் தெரிசனத்தைக் கண்டார்தாமே ***(5416)***

மேலும் அவர் சீனப் பெண்களுக்கு சிடிகை வேதை என்ற ஒரு மருத்துவத்தை செப்பினேன் என்றும் கூறுகின்றார்.

நிற்கவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
    நிலையான புலிப்பாணி மைந்தாகேளு
வற்பமென்று நினையாதே யிந்தப்போக்கு
    வருமையுள்ள சீனபதிப்பெண்களுக்கு
***சொற்பதமாய் ஈடொன்று சிடிகைவேதை***
    ***செப்பினேன் சீனபதிப்பெண்களுக்கு***
வுற்பனமாய் யானுரைத்த கைமசக்கு
    வுத்தமனே ஈறுவகை சொல்வேன்பாரே *(5427)*

மற்றொரு பாடலில் அவர் உலக வித்தை எல்லா-வற்றையும் மிகவும் விருப்பத்துடன் மாதர்களுக்கு உபதேசித்ததையும் உரைக்கின்றார்.

காணவே போகரிசிமுனிவர்தானும்
    கனமுடனே சீனபதிப்பெண்களோடு
பூணவே கல்விமுகம் சிலதுகாலம்
    பொங்கமுடன் தாமிருந்ததார் லீலைதன்னில்
***வேணதொரு வுலகாதி வித்தையெல்லாம்***
    ***விருப்பமுடன் மாதர்களுக்குபதேசித்து***
நீணவே கவனமென்ற குளிகைதன்னை
    நீதியுடன் தாம்பூண்டார் போகர்பாரே *(4667)*

***போதித்தேன் சீனபதிப்பெண்களுக்கு***
    ***புகழான வாதமென்ற கடலையப்பா***
ஆதித்தன் சந்திரன்போல் அதிதவித்தை
    யவர்களிடம் யானதென்று போதித்தல்லோ *(5372)*

## போகர் சித்தர் சீனப் பெண்களுக்கு அதிசயங்களைக் காட்டுதல்

அவர் பல உலகங்களுக்கும் சென்று பல அதிசயங்களை கண்டதை சீனப் பெண்களுக்கு உரைத்ததாக ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார். அட்டாங்க யோகம் பற்றிய விவரங்களை எல்லாம் ஒன்று திரட்டி அதை ஒரு நூலாகச் செய்து, சீன மக்களுக்குத் தந்ததாகவும் கூறுகின்றார். தான் கண்ட அதிசயங்களை எல்லாம் சீன பெண்களுடன் பேசும்போது கூறியதாகவும் பாடல்கள் உள்ளன.

உரைத்தேனே சீனபதி மாண்பருக்கு
*வுத்தமனே லோகவதிசயங்களெல்லாம்*
*வுரைத்தேனே சீனபதி பெண்களுக்கு*
வகுப்பான சித்தமுனி ரிசிகள் மார்க்கம்
திரைகடல்சூழ் ***அட்டாங்க யோகமெல்லாம்***
திரட்டினேன் போகரேழாயிரந்தான்
புரையொன்றும் நேராமல் புகழ்ந்தநூலாய்
புகட்டினேன் சீனபதிமாண்பருக்கே ***(5747)***

தந்தேனே என்றுசொல்லி போகர்தாமும்
சட்டமுடன் சீனபதிக் கேகியல்லோ
அந்தமுடன் ***சீனபதிபெண்களுக்கு***
***யவனிதனில் நடந்ததொரு வதிசயங்கள்***
***சொந்தமுடன் தாமுரைத்து*** சித்துதாமும்
சுந்தரனார் காலாங்கி சமாதிபக்கல்
விந்தையது யின்னமிகக் காணவென்று
விருப்பமுடன் குளிகையிட்டு சென்றிட்டாரே ***(6419)***

கூறுவார் வாய்திறந்து போகர்தாமும்
கொப்பெனவே ***சீனபதிபெண்களுக்கு***

மாறுபடா லோகவதிசயங்களெல்லாம்
மகத்தான ***நாலுயுக வதிசயங்கள்***
ஆறுபுடை சூழ்நகரம் வடதேசந்தான்
அடைவான கானாறு மலைகள் குன்கள்
வீறுபுகழ் ரேணுகையாள் சமாதிபாகம்
விருப்பமுடன் தாமுரைத்தார் போகர்தாமே ***(4755)***

தானான சீனபதிப் பெண்கள்மாரே
தன்மையுடன் ***வதிசயங்கள் இன்னஞ்சொல்வேன்***
கோனான யெனதையர் காலாங்கிநாதர்
கொற்றவனார் குருபாதக் கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் அருளினாலும்
தேசமெல்லாம் சுத்திவந்தேன் இதுபோலில்லை
பானான ரேணுகையின் தெரிசனத்தை
பாருலகில் அடியேனுங் கண்டிட்டேனே ***(4769)***

தன்னுடைய உபதேசங்களைப் பெற்ற பெண்கள் குளிகையின் உதவியால் இமயகிரி வரை சென்று வந்தார்கள் என்பதையும் குறிப்பிடுகின்றார்.

தேனேகேள் சீனபதிப் பெண்களுக்கு
தேற்றமுடன் உபதேசம் பெற்றதெல்லாம்
வானேகேள் குளிகையது கொண்டுமல்லோ
மகத்தான யிமயகிரி சென்றார்காணே ***(4849)***

சீனபதி பெண்கள் மட்டும் ஒரு குறிப்பிட்ட மார்க்கத்தை பின்பற்றினார்கள் என்பதை ஒரு பாடல் மூலம் விளக்குகின்றார்.

தானான காலாங்கி கடாட்சத்தாலும்
தாக்கான மனோன்மணியாள் கிருபையாலும்
மானான நாலுயுகங் கடந்துவந்தேன்
மகத்தான வையத்தில் எல்லாருந்தான்

*கோனான சீனபதி பெண்கள்நீக்கி*
*குவலயத்தில் எல்லாரும் இருந்தமார்க்கம்*
வேனான வெட்டவெளி மயக்கத்தாலே
விருதாவாய் மாண்பரெல்லாம் மயங்கினாரே *(5184)*

## போகர் சித்தர் சீனப் பெண்களுக்கு தேவியரின் தரிசனத்தைக் காட்டுதல்

பல தேசங்களை சுற்றி வந்த போதும், அன்பான ரேணுகா அம்மையாரின் தரிசனத்தைக் கண்டதை அந்தப் பெண்களுடன் பகிர்ந்து கொண்டதை ஒரு பாடலிலே மகிழ்ச்சியுடன் பாடுகிறார்.

காணவே ***ரேணுகையின்*** மார்க்கந்தன்னை
கடிதான ***சீனபதிபெண்களுக்கு பூணவே***
செய்தியெல்லாம் தானுரைத்து பொங்கமுடன்
மகிமைதன்னைக் கூறுவார்காண் *(4758)*

அவர் சீனப் பெண்களுடனே உபதேசம் செய்யும் காலத்தில் பல தேவியரின் தரிசனத்தை காட்டுகின்றார். அதில் முக்கியமாக இரு தேவியர். ஒருவர் ரேணுகா தாயார்; மற்றொருவர் சாயாதேவி தாயார். சாயா தேவியை சூரியனின் மனைவியாக இந்து மதம் குறிப்பிடுகிறது. போகர் சித்தர் வணங்கிய சாயா தேவி தாயார் அவராக இருக்கக் கூடும். ரேணுகா தாயார், அம்மனின் அம்சமாக தென்னகத்தில் வழிபட்டு வரும் பெண் கடவுள். இவ்விரு தேவியரின் தரிசனத்தை அவர்களுக்குக் காட்டியதாக சில பாடல்கள் மூலம் தெரிவிக்கின்றார்.

இட்டதொரு போகரிசிநாதர்தாமும்
***எழிலான சீனபதிபெண்களுக்கு***
***சட்டமுடன் சாயாவின் தரிசனத்தை***
***சாங்கமுடன் போதித்தார் போகர்தாமும்***

அட்டதிசை தான்புகழும் சாயாவின்தன்
வன்பான தரிசனத்தை கூறும்போது
திட்டமுடன் மாதரெல்லாம் கண்டுமல்லோ
திறமுடனே மனதுவந்து களிப்புற்றாரே *(5226)*

அவர்களின் தரிசனத்தைப் பெற்ற பெண்கள் எல்லோரும் மிகவும் மகிழ்ந்து, போகர் சித்தரை தரிசித்து மனம் களித்ததாகவும் ஒரு பாடல் கூறுகிறது.

களிப்பான தெரிசனத்தைப் பெண்களெல்லாம்
கருத்துடனே பார்த்தல்லோ சந்தோசித்து
தளிர்போன்ற கரமதனை கண்ணில்வொத்தி
சார்புடனே சாயாவின் தரிசனத்தை
பளிங்குடனே எங்களுக்கு போதித்தாலே
பாங்குடனே தரிசித்து மனங்களித்து
***அளியாமல் எங்களது காயந்தன்னை***
***வவனியிலே தாமிருக்கச் செய்வோம்பாரே*** (5227)

## போகர் சித்தரின் பாடல்களுக்கான சீனப் பின்னணி

கன்பூசிய மதம் ஆண்களுக்கு முக்கியத்துவம் கொடுத்த போது, தவோ மதம் பெண்களைக் கடவுளாகவும், சக்தியின் இருப்பிடமாகவும் கருதிய மதமாக விளங்கியது.

போகர் சித்தர் தான் லவோ ட்சு (போ-யாங்) என்ற பெயரில் தவோ மதத்தை உருவாக்கியவர் என்ற வாதம் ஆய்வாளர்கள் மத்தியில் உண்டு. இந்தப் பகுதியில் வரும் பாடல்களைக் கொண்டு பார்த்தால், அந்த வாதத்திற்கு இவை சான்றாகக் கூட கொள்ளலாம்.

தவோ மதத்தை பின்பற்றுபவர்கள் சி வாங் மு (Xi Wang Mu) என்ற பெண் தெய்வத்தை வணங்கியதாகச் சீன நூல்கள் தெரிவிக்கின்றன. ஆங்கிலத்தில் Queen Mother of the West



என்று அழைப்பார்கள். இந்தத் தெய்வம் ரேணுகா தாயாராக இருக்க அதிக வாய்ப்பு உள்ளது.

சாகாவரம் பெற்ற சகோதரிகள் சீனாவில் வாழ்ந்துள்ளார்கள். அவர்கள் இருவரும் காலாங்கி சித்தர் மற்றும் போகர் சித்தர் என்று கொள்ளலாம். சீனாவில் தவோ மதப் பெண்களைப் பற்றிய இரு நூல்கள் உசாத்துணையில் கொடுக்கப்பட்டுள்ளன. குறிப்புகளை அதில் பெறலாம்.



போகர் 7000 பாடல்களில், போகர் சித்தர் சீனாவைப் பற்றிக் கூறும் விவரங்களை நாம் சீன வரலாற்றிலும்,

தொன்மைக் கதைகளிலும் கண்டுபிடிக்க முடிவது விந்தையாக உள்ளது. அவர் சீனப் பெண்களுக்கு ஆற்றிய தொண்டுகளை அவரது பாடல்கள் அருமையாக படம் பிடித்துக் காட்டுகிறது என்றே சொல்லலாம்.

போகர் சித்தர் சீனா சென்று வாழும் போது அங்கு ஒரு பிறப்பிலே அவர் பெண்களுடன் இருந்ததைப் பற்றி குறிப்பிடுகின்றார். அப்போது அவர் அந்தப் பெண்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்றும், அவர்களுக்கு தான் என்னவெல்லாம் உபதேசம் செய்தேன் என்றும், மேலும் நம்முடைய கடவுளான ரேணுகா தாயாரையும், சாயாதேவி தாயாரையும் அவர்களுக்கு காட்டி அவர்களின் அருளாசியை பெற்றுத் தந்ததைப் பற்றியும் பல பாடல்களில் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். அந்தப் பாடல்களைதான் இந்தப் பகுதி உங்களுக்குக் கொடுத்துள்ளது. போகர் சித்தரைப் பற்றிய மேலும் ஆய்வுகள் தமிழர்களுக்கும் சீனர்களுக்கும் உள்ள தொடர்புகளுக்கான மேலும் பல சான்றுகளையும் பொருள்களையும் நிச்சயம் வெளிக்கொணரும் என்று நம்பலாம்.



# போகர் சித்தர் போற்றும் சீனாவிற்குச் சென்று வாழ்ந்த காலாங்கிச் சித்தர்

# (Bhogar Siddhar about Kalanghi Siddhar who went and lived in China)




தென்னகத்தில் வாழ்ந்த போகர் சித்தர் தன்னுடைய குருவான காலாங்கி சித்தரின் அருளால் சீனாவிற்குச் சென்று வாழ்ந்ததைப் பற்றி தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் கூறியுள்ளார். காலாங்கி சித்தர் தமிழகத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், அவரும் சீனாவில் சென்று வாழ்ந்ததாக போகர் சித்தரின் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. அத்தகைய பாடல்களை தொகுத்து, போகர் சித்தர் போற்றும் சீனாவிற்கு சென்று வாழ்ந்த காலாங்கி சித்தரைப் பற்றி இந்தப் பகுதி விளக்குகிறது. காலாங்கி சித்தர் சீனாவிற்குச் சென்று வாழ்ந்து, பலருக்கும் உபதேசங்கள் செய்து, அங்கேயே சமாதி அடைந்ததாகவும் பாடல்கள் மூலம் அறியக் கிடைக்கின்றன. இந்தத் தகவல்களை இந்தப் பகுதி விளக்குகின்றது.

**உ**லகில் வேறெங்கிலும் கேட்க முடியாத, பார்க்க முடியாத, வித்தைகளை, அதிசய வித்தைகளைச் செய்பவர்கள் சித்தர்கள் என்று தமிழகத்தில் நாம் கூறுகின்றோம். அத்தகைய சித்து வேலைகள் செய்யும் சித்தர்கள், சீனாவிலும் இருப்பது நமக்கு அறியக் கிடைக்கிறது. அவர்களைச் சீனர்கள், சாகாவரம் பெற்ற மாந்தர்கள் (Immortals) என்று அழைக்கின்றனர். அத்தகைய வரிசையில் காலாங்கி சித்தரும் ஒருவராக இருக்கலாம் என்று அனுமானிக்கலாம். இந்தப் பகுதியில் போகர் சித்தரின் குருவாக காலாங்கி நாதர் இருந்ததைப் பற்றி போகர் சித்தர் பாடிய போகர் ஏழாயிரத்தின் மூலம் நாம் அறியலாம்.

அவர் காலாங்கிநாதரை தன்னுடைய தந்தையாகவும், குருவாகவும் ஏற்று, அவரிடம் பல உபதேசங்களைப் பெற்றிருக்கின்றார். அவரை தன் குருவாக சொல்லும்போது, மற்ற சித்தர்கள் அவருக்கு எப்படி உபதேசங்கள் செய்தார்கள் என்பதையும் தன்னுடைய பாடல்களில் விளக்குகிறார். இந்தப் பகுதி காலாங்கி சித்தர் சீனாவில் இருந்ததைப் பற்றியும், அங்கு சமாதி அடைந்ததை பற்றியும், அவருடைய சீனப் பின்னணி பற்றியும் விளக்குகிறது. மேலதிகமான ஆய்வுகள் காலாங்கி நாதர் சீனாவில் போற்றப்படும் பல சாகாவரம் பெற்ற மாந்தர்களில் ஒருவர் என்பதை அறிய உதவும்.

இந்தப் பகுதி போகர் ஏழாயிரத்தில் உள்ள பாடல்களை ஆராய்ந்து, அதில் காலாங்கி சித்தர் பற்றி கூறப்பட்ட கருத்துக்களைத் தொகுத்து, எழுதப்பட்டுள்ளது. போகர் ஏழாயிரத்தில் தேடு தளம் மூலம் காளாங்கி(6), காலாங்கி(842)

என்ற சொற்களைக் கொண்டு ஆய்வு செய்யப்பட்டது. அடைப்புக்குறிக்குள் உள்ள எண்கள் அந்தச்சொற்கள் எத்தனை முறை அந்த நூலிலே வந்துள்ளன என்பதைக் குறிப்பிடுகின்றது. பல நூறு பாடல்கள் இருந்தபோதும், அதில் சில குறிப்பிட்ட பாடல்களைக் கொண்டு இந்தப் பகுதி விளக்கப்பட்டுள்ளது.

## சீனாவில் காலாங்கி சித்தர்

காலாங்கி சித்தர், பிறப்பு, சீனாவிற்கு சென்று, அங்கு வாழ்ந்து, மறைந்ததைப் பற்றி போகர் சித்தர் தன்னுடைய நூலில் குறிப்பிட்டுள்ளார். அந்தக் குறிப்புகளை முறைப்படுத்தி, சில தலைப்புகளின் கீழ், இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. காலாங்கி சித்தர், போகர் சித்தரின் தந்தையாக, அவருடைய குருவாக, மேலும், செய்த உபதேசங்கள் அவரது நூல்கள், சீனாவில் அவர் எப்படி வாழ்ந்தார் மற்றும் காலாங்கி சித்தர் போகர் சித்தருக்கு கொடுத்த வரம், காலாங்கி சித்தரின் சீடரெனக் கூறியதால் கிடைத்த மதிப்புகள் என்ற தலைப்புகளில் இந்தப்பகுதி தரப்பட்டுள்ளது.

## காலாங்கி சித்தரின் பிறப்பு

காலாங்கி நாதர் எப்போது பிறந்தார் என்று போகர் சித்தர், ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார். உண்டானது சித்திரை மாதம், அஸ்வினி நாலாம் காலத்தில், ஜகத்குருவின் மைந்தனாக பிறந்ததாகப் பாடல் குறிப்பிடுகின்றது.

நூலான நூலிதுதான் நுணுக்கமெத்த
நுட்பமுடன் காலாங்கி பிறந்தவண்ணம்
***பாலான சித்திரையாம் மாதமப்பா***
***பாங்கான வசுவினியாம் நாலாங்காலாம்***
***சேலான ஜெகத்குரு மைந்தனப்பா***
செயலான பாக்கியமும் பெற்றமைந்தன்

காலானகாலாங்கி நாதரப்பா
காசினியில் ***வந்துதித்த வுருவுமாச்சே*** ***(5869)***

## போகர் சித்தரின் தந்தையாக காலாங்கி சித்தர்

போகர் சித்தர் பல பாடல்களிலே காலாங்கி சித்தரை தன்னுடைய தந்தையாகப் போற்றுகின்றார். அதில் எனை ஈன்ற, தந்தை மற்றும் காலாங்கி மைந்தன் என்ற வார்த்தைகளின் மூலம் அறிகிறோம்.

எனை***யீன்ற*** ஆயர் காளாங்கிநாதர் ***(39)***

தன்றாரே ***தந்தை*** காலாங்கி நாதர் ***(98)***

தாட்டையிலே காலாங்கி ***மைந்தன்*** போகர் ***(953)***

## போகர் சித்தரின் குருவாக காலாங்கி சித்தர்

போகர் சித்தர் தன்னுடைய குருவான காலாங்கி சித்தர், அறியாதவர்க்கும் பல சிறியோர்க்கும் அறிவு தந்தார் என்று தன் குருவின் தன்மையை எடுத்துக் கூறுகிறார். அதில் தானும் அவரிடம் பக்குவமாகக் கற்றதாக ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார். பல இடங்களில் தேடிய பின்பு காலாங்கி சித்தரிடம் தான் சீடராக சேர்ந்து நல்ல சீடனாக இருந்ததாக ஒரு பாடலில் சுட்டுகிறார்.

ஐயரென்ற காலாங்கி ***நாதர்தானறியாத***
***சிறியோர்க்கு அறிவுதந்தார்*** ***(150)***

பரவியே காலாங்கி நாதர் சொன்னார்
***பக்குவத்தில் அடியேனும் பார்த்துத்தேறி*** ***(345)***

நாதரும் சமாதிக்குப் போகுமுன்னே
நலமுடனே அடியேனும் போகர்தாமும்
பாதமுடன் அவர்பாதம் பணிந்துகொண்டு
***பாரினிலே உபதேசம் யாவும்பெற்று***

*நீதமுடன் சீஷனில் நற்சீஷனாகி*
*நிகமையுடன் நாதனுட அருளும்பெற்று*
*போதமுடன் உலகுதனில் குளிகைபூண்டு*
புறப்பட்டுப் போனேனே சீனந்தானே **(2417)**

நீடியதோர் காலாங்கி கிருபையாலே
நீதியுடன் நெடுங்கால மிருந்தேனங்கே
தேடியே காலாங்கி நாதர்தாமும்
***தேற்றமுடன் தன்தனக்கு உகந்தசீஷன்***
நாடியே வேண்டுமென்று நன்மையாலே
***நானவற்கு நற்சீஷனாகினேனே*** **(6946)**

## போகர் சித்தருக்கு காலாங்கி சித்தர் செய்த உபதேசங்கள்

அவரிடம் பலவற்றையும் கற்று, தான் சீனாவிற்கு சென்றதாகவும் ஒரு பாடலில் கூறுகின்றார். காலாங்கி சித்தரிடம் அவர் பதஞ்சலி வியாக்ரமர் சிவயோகம் கற்றதாகவும் குறிப்பிடுகின்றார். அவரிடம் வாசி வித்தையையும் சாரத்தின் மகிமையையும் உபதேசமாகப் பெற்றதையும் விளக்குகிறார். அவர் சீனாவில் இருக்கும்போது, காலாங்கி சித்தர் வையகத்து மகிமையெல்லாம் மார்க்கமுடன் உபதேசித்ததாகக் குறிப்பிடுகின்றார்.

இருந்தமுனி காலாங்கி வெகுகோடிகாலம்
யெழிலான வித்தைகளுமற்புதங்கள் செய்தார்
குருந்தமுடன் எந்தனுக்கு ஞானவுபதேசம்
கூறினார் சங்கற்பமனந்தம்பேர்க்கு
திருந்தவே வுபதேசமானபின்பு தீரமுடன்
சமாதிக்கு யேதுகொண்டார்
பொந்தவே யடியேனும் ***வுபதேசம்பெற்று***
***புறப்பட்டேன் சீனபதிதேசந்தானே*** **(2009)**

ஏறியே பாரென்று ஐயர்சொன்னார்
எனையீன்ற ஆயர்காளாங்கிநாதர்
பாருஅது வழியென்று பக்குவத்திச்சொன்னார்
***பதஞ்சலியும் வியாக்கிரமர் சிவயோகமும்*** ***(39)***

இருத்தியே பாரென்று சொன்ன ஏத்தமாங்
காலாங்கி ஐயர் தாமும்
பருந்தியே பக்குவம் பார்த்தெனக்குச் சொன்னார்
***பாரென்றார் வாசியைத்தான் பூரணத்தில்லயிக்க***
மருந்தியே கண்ணிமைக்குள் வாயில்வந்து கலங்கும்
***மருவிரண்டும் பிறந்திறந்து வித்திதென்றார்***
மறித்துமே மவுனத்தை விடாதேயென்றார்
மகத்தான விதுரண்டால் பிறப்புமாச்சே ***(220)***

நேரென்ற திருமூலர் ஆயிரத்தில்சொன்னார்
***நேர்ப்பான காலாங்கி சொல்லக்கேட்டுத்***
தேனென்ற வேழாயிரத்தில்தான் திறந்துசொன்னேன்
சிறப்பா சாறனைகள் செய்யமார்க்கம் ***(1162)***

சிவந்திருந்த சாரத்தின் மகிமைசொல்ல
சித்தர்முதல் ரிஷிகளுக்கும் முடியாதப்பா
உவந்திருந்த ***காலாங்கி நாயனார்சொல்ல***
***உண்மையாய்க் கேட்டிருந்து யானுங்கண்டேன் (557)***

## போகர் சித்தர் சொல்லும் காலாங்கி சித்தர் நூல்கள்

காலாங்கி நாதர் ஐந்து காண்டங்களையும், நாலு காண்டங்களையும், ஏழு லட்சத்தையும் பாடல்களாகத் தந்ததாகவும் போகர் சித்தரின் பாடல்களிலே அறியக் கிடைக்கிறது.

தன்றாரே தந்தை காலாங்கி நாதர்
தாமுமோசகல நூல்பார்த்துத் தேர்ந்து

அண்டாரே யகண்டம்***போலஞ்சு***
***காண்டஞ்சொன்னார்*** ஆயிரத்தெட்டு
அண்டமெல்லாம் அலாவினேனே ***(98)***
பாட்டாக காலாங்கி நாதர்தாமும் பக்குவமாய்
***நாலுகாண்டம் சொன்னாரையா*** ***(509)***

கரைகாணா சாத்திரங்கள் மெத்தவுண்டு
காரணமாங் காலாங்கிநாயனார்தாமும்
நிறைகாணா ***ரேழுலட்சம் விரித்துச்சொன்னார்*** ***(1143)***

## சீனாவில் காலாங்கி சித்தர்

காலாங்கி சித்தர் சீனாவிற்கு சென்றதையும் அங்கு போகர் சித்தர் பெற்ற உபதேசத்தைப் பற்றியும் இரண்டு பாடல்கள் மூலம் நாம் அறிகிறோம்.

கூறியே உபதேச உண்மைதன்னை
குணமான காலாங்கி நாதருக்கு
தேறியதோர் கிரேதாயி னுகத்தில்தானும்
தேற்றமுடன் தானடைந்த மகிமையெல்லாம்
ஆறிடவே காலாங்கி நாதருக்கு
அங்ஙனவே உபதேசஞ் செய்தாரல்லோ
***பீறியே காலாங்கி நாதர்தாமும்***
***மிக்கவே சீனபதி சென்றிட்டாரே*** ***(6897)***

தானான சித்துமகா ரிஷியாருக்கு தண்மையுள்ள
மனுவென்று சொல்வேனப்பா
கோனான எனதையர் காலாங்கி நாதர்
கொற்றவனார் சீனபதி தேசந்தன்னில்
***மானான வையகத்து மகிமையெல்லாம்***
***மார்க்கமுடன் எந்தனுக்கு உபதேசித்தார்***
பானான சதகோடி சூரியன்போல்
பாடினேன் சத்தகாண்டம் பண்பாய்தானே ***(6992)***

காலாங்கி நாதர் இந்த உலகில் பல காலங்கள் வாழ்ந்ததைப் பற்றியும் பாடல்களில் குறிப்பிடுகிறார் போகர் சித்தர்.

தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
தகதையுள்ள புலிப்பாணி சொல்லக்கேளும்
கோனான எனதையர் காலாங்கி நாதர்
***குவலயத்தில் வெகுகால மிருந்தாரப்பா*** **(4058)**

காணேணே என்றுசொல்லி காலாங்கி நாதர்
கனமாக எந்தனுக்குச் சொன்னதுண்டு
பேணபடி ***வெகுகாலங் காத்திருந்தார்***
***வேதாந்தத் தாயினதுவருளைக்காண***
மாணவே வரைகோடி காலமப்பா
***வையகத்தில்*** மனோன்மணியாள் சொரூபங்காண
நீணவே காயாதிகற்பங்கொண்டு
***நெடுங்காலந் தாமிருந்ததார் தவசியாமே*** **(4059)**

## காலாங்கிநாதர் சீனாவிற்கு சென்று வாழ்ந்தது

காலாங்கிநாதர் தமிழகத்தில் இருந்த போதும், அவரும் சீனாவிற்குச் சென்று வாழ்ந்தவர் என்பதை நாம் பாடல்களின் மூலம் அறிந்து கொள்கின்றோம். சீனாவில் காலங்கிநாதர் சிறப்புடன் வாழ்ந்து அங்கு சமாதி அடைந்ததைப் பற்றியும் அவர் கூறுகின்றார்.

சித்தான காலாங்கி நாதர்தானும்
சிறப்புடனே ***சீனபதி தன்னிற்சென்று***
முத்தான காலனது வருளும்பெற்று
முனையான சமாதிதனில் இறங்கியல்லோ
சத்தமுடன் அசரீரி வாக்கினோடும்
தாரணியில் சமாதிமுகம் இருந்துகொண்டு

பத்தியுடன் சீனபதிமாண்பருக்கு ***பலகாலுந்***
***தரிசனைகள் புரிகுவாரே*** *(5742)*

## போகர் சித்தருக்கு காலாங்கி சித்தர் கொடுத்த வரம்

காலாங்கி சித்தர் போகர் சித்தருக்கும், சீனப் பெண்களுக்கும் ஆகம சாஸ்திர புராணங்களை எல்லாம் போதித்ததாகவும், அப்போது, தான் அவருடைய சீடனாக நெடுங்காலம் இருந்ததைப் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

ஏகவே காலாங்கி நாதர்தாமும்
எழிலான ***சீனபதி தன்னிற்சென்று***
***பாகமுடன் லோகவதிசயங்களெல்லாம்***
***பாலித்தார் சீனபதிப்பெண்களுக்கு***
***ஆகமசாஸ்திர புராணங்களெல்லாம்***
***அங்ஙனவே போதித்து வினயங்கூறி***
***போகரென்ற எந்தனுயும் சீஷனாக்கி***
***பொங்கமுடன் நெடுங்காலம் இருந்திட்டாரே (6893)***

## காலாங்கிநாதருக்கு சீனாவில் சமாதி

காலாங்கிநாதர் சீனபதிக்குச் சென்று வாழ்ந்து அங்கேயே சமாதி அடைந்ததைப் பற்றிப் பல பாடல்கள் குறிப்பிடுகின்றன. அவரை போகர் சித்தர் சென்று வணங்கி வழிபட்டுள்ளதாக அவரே கூறியுள்ளார்.

சீனபதியிற்சென்று தோற்றமுடன் காலாங்கி நாதர்
பக்கம் வேணபடி ***சமாதிமுகந்தானிருந்து*** ***(992)***

மூச்சடக்கிக் காலாங்கி நாதர்தாமும்
மூதுலகில் ***சமாதிமுகஞ்***சென்றபோது
பாச்சனுடனெந்தனுக்கு வுபதேசித்த
பாங்கான செந்தூர வேதையப்பா ***(986)***

தேனான ***காலாங்கி பாதஞ்சென்று தெரிசித்து***
அவருடைய வருளுங்கொண்டேன் ***(2059)***

அதே போன்று ஒரு பாடலிலே காலாங்கி சித்தர் இந்தியாவிலே சமாதி அடைந்ததைப் பற்றியும் அறியமுடிகிறது.

திருந்தவே வுபதேசமானபின்பு தீரமுடன்
***சமாதிக்கு*** யேதுகொண்டார் ***(2009)***

## காலாங்கி சித்தர் சீடன் என்ற கூற்றால் பெற்ற மதிப்புகள்

போகர் சித்தர் காலாங்கி சித்தரின் சிறப்பான சீடனாக இருந்தேன் என்று கூறும் அதே நேரத்தில், தான் சென்ற இடங்களிலெல்லாம், தான் காலாங்கி சித்தரின் சீடன் என்று கூறியபோது, பெற்ற மதிப்புகளை பற்றி பல பாடல்களில் தெரிவித்துள்ளார். அவர் சென்ற இடங்களில், தான் பல பொருள்களை கற்க வேண்டிய போது, அந்தச் சித்தர்களிடம் தான் காலாங்கி சித்தரின் சீடனென்று சொல்லியதாகவும் நாம் அறிகிறோம். அது கீழ்க்கண்ட பாடல்களிலே அவர் கூறியிருப்பதிலிருந்து தெளிவாகிறது.

தாட்டையிலே காலாங்கி மைந்தன்போகர்
சார்பான ***சீஷனென்று*** சொல்லிக்காட்டு
வீட்கையிலே ***சந்தோசித்தழைத்***தேயுன்னை
***வேண்டியதோர் பாசாணமூலிகையுமீய்வார் (953)***

நினைந்திட்டே னென்சாமி குருவேயென்றேன்
நினைத்ததொரு வண்மைதனை யறிந்துகொண்டார்
முனைதிட்டு சித்தரெல்லாம் என்னைப்பார்த்து
முழிமிரட்டி காலாங்கி நினைத்தாயல்லோ
கனைத்திட்டு மனோவயத்தை யறிந்துகொண்டார்
***காலாங்கிநாயனுடசீஷனென்று***

புனைந்திட்டு வென்மீதில் பட்சம்வைத்து
    ***புகழ்ச்சியுடன் கொண்டனைத்தா ரென்னைத்தானே***
***(1344)***

என்னவே யடியேனும் தாள்பணிந்தேன்
    யெழிலான காலாங்கிதனை நினைந்தேன்
சொன்னதோர் சித்தர்கட்கு விடையுஞ் சொன்னேன்
    சுடரொளியாங் ***காலாங்கி சீஷனென்றேன்***
நன்னயமா யெனையழைத்து குகையிற்சென்று
    நாதாக்களிருப்பிடமும் காண்பித்தேதான்
பன்னயமாஞ் ***சித்தர்களின் மரபுசொல்லி***
    ***பட்சமுடனெந்தனுக்கு வழிசொன்னாரே*** ***(1757)***

பட்டமன்னன் கொலுவினுட சமாதிபக்கம்
    பாங்குடனே நிற்கையிலே சித்தர்கூட்டம்
திட்டவந்து யென்னையாரென்று கேட்க
    கீர்த்திபெற்ற ***காலாங்கிசீஷனென்றேன்***
***சட்டமுட னென்னையவர்பட்சம் வைத்து***
    ***சாங்கமுடன் ஆசீர்மம் செய்தார்தாமே*** ***(1788)***

தன்னுடைய சீடன் என்று சொன்னால் போகர் சித்தருக்கு மற்ற சித்தர்கள் எப்படி உபதேசம் செய்வார்கள் என்று காலாங்கி நாதர் கூறுவதாக போகர் சித்தர் சொல்லும் பாடல் ஒன்றும் உண்டு.

விதியான வுபதேசஞ் சொல்லுவார்கள்
    விண்ணுலகு வதிசயங்கள் மிகவுரைப்பார்
மதிபோன்ற எந்தனிட போகநாதா
    வையகத்தில் நீர்காணும் புத்திமானாய்
துதியுடனே காலாங்கிசீஷனென்று துப்புரவாய்
    நீயுரைத்தபோதேயப்பா

கதிபெறவே யுந்தனுக்கு யாவுஞ்சொல்லி
கருவான போகரென்று கருதுவாரே (3860)

## காலாங்கி சித்தரின் வயது

போகர் சித்தர் தன் குரு எத்தனை வயது வரை வாழ்ந்தார் என்பதை இரு பாடல்களின் மூலம் கூறுகின்றார்.

தானான புலிப்பாணி மைந்தாகேளு
தண்மையுடன் என்குருவாங் காலாங்கிநாதர்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே
தேசமெல்லாங் குளிகைகொண்டு சென்றபோது
கோனான குருதனக்கு வயதுசொல்வேன்
கொற்றவனே ***முந்நூற்றப் பதினைந்தாகும்***
பானான வாண்டுமது வஞ்சேயாகும்
***பாங்கான வாண்டுக்கு வறுபதாமே*** (5569)

ஆமேதான் வறுபதுவும் யென்றவாக்கு
வப்பனே தலைமுறைதான் ஒன்றேயாகும்
கோமான்கள் ஓராண்டு இருந்ததில்லை
கொற்றவனே தேகமதை மெய்யென்றெண்ணி
வேமேதான் ***முந்நூறு வாண்டுசொச்சம்***
வேதாந்தத் தாயினது கிருபையாலே
தாமேதான் ***முந்நூறு வானமட்டும்***
தகமையுடன் காலாங்கி இருந்திட்டாரே (5570)

## காலாங்கி சித்தரின் சீனப் பின்னணி

காலாங்கி சித்தர் சீனாவில் வாழ்ந்தது பற்றி சீனாவில் குறிப்புகள் இருக்கிறதா என்று பார்க்கும்போது, காலாங்கி சித்தர், சீனாவில் வாழ்ந்த 8 சாகாவரம் பெற்ற மாந்தர்களில் ஒருவராக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

மேலும் அவர் சீனாவில் பெண்களுக்கு உபதேசம் செய்தேன் என்று கூறியது, சீனாவின் இலக்கியங்களிலே இரண்டு பெண்கள் சாகாவரம் பெற்ற மாந்தர்கள், மக்களுக்கு பல வித்தைகளைக் கற்றுக் கொடுத்ததை வரலாற்றுக் குறிப்பு தருகிறது. இதன்மூலம் காலாங்கி சித்தரும் போகர் சித்தரும் சீனாவில் வாழ்ந்ததாக நாம் எடுத்துக்கொள்ளலாம். இதைப் பற்றி ‘போகர் கண்ட சீனப் பெண்கள்’ என்ற பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

காலாங்கிநாதர் சீனாவில் என்ன பெயரில் வாழ்ந்தார் என்பதற்கான ஆய்வுகள் மேன்மேலும் செய்தால், அதை வெளிக்கொணர உதவும்.

போகர் சித்தரின் குருவாகத் திகழ்ந்து, காலாங்கி சித்தர் பிறப்பு, அவர் போகர் சித்தருக்கு தந்தையாகவும், குருவாகவும், நண்பராகவும் இருந்து உபதேசங்கள் செய்ததைப் பற்றியும், அவர் சீனாவில் வாழ்ந்து சமாதியான விஷயங்கள் பற்றியும், போகர் காலாங்கிநாதரிடம் கற்ற வித்தைகளை பற்றியும் இந்தப் பகுதி விளக்கியுள்ளது. காலாங்கிநாதர் சீனாவில் என்ன பெயரில் வாழ்ந்தார் என்பதற்கான ஆய்வுகள் நடத்தப்பட்டால், அதைத் தெளிவுபடுத்தலாம்.



# போகர் சித்தரின் சீடராக சீனாவில் புலிப்பாணி சித்தர் (Bhogar disciple Pulipani in China)



**தெ**ன்னகத்தில் வாழ்ந்த பதினெட்டு சித்தர்களில் புலிப்பாணி சித்தர், போகர் சித்தரின் சீடராக விளங்கினார் என்பதை நாம் சித்தர் இலக்கியங்கள் மூலம் அறிகின்றோம். போகர் சித்தர் சீனாவிற்குப் பலமுறை சென்று வந்ததை தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். அது மட்டுமல்லாமல், தன்னுடைய சீடரான புலிப்பாணி சித்தரும் சீனாவிற்கு வந்து போனதை பற்றி எழுதியுள்ளார். அதைப் பற்றிய விவரங்களை இந்தப் பகுதி, புலிப்பாணி சித்தரின் பிறப்பு, அவரது வேங்கை மேல் பவனி, போகர் சித்தர் குருவாகவும், தந்தையாகவும் இருந்தது, போகர் சித்தருடன் சீனாவிற்கு சென்றது, சீனாவில் அவரது பணி, புலிப்பாணி சித்தரின் குணங்களைப் பற்றி போகர் சித்தர் கூறுவது, அவருக்கு போகர் சித்தர் கொடுத்த நூல்கள், அவர் காலாங்கி சித்தரிடமும் போகர் சித்தரிடமும் பெற்ற உபதேசங்கள், புலிப்பாணி சித்தர் மரபு மற்றும் புலிப்பாணி சித்தரின் சீனப் பின்னணி என்ற தலைப்புகளில் பல கருத்துக்களை தெரிவிக்கிறது.

**த**மிழகத்தில் சித்தர்கள் வாழ்ந்து, மருத்துவர்களாக இருந்து நம்முடைய தமிழ்ச் சமூகத்தைக் காத்த, பல கருத்துகள் சித்தர் இலக்கியங்களில் உள்ளன. பதினெண் சித்தர்களில் போகர் சித்தர் மற்றும் அவருடைய சீடரான புலிப்பாணி சித்தர் இருவரைப் பற்றியும் நாம் போகர் சித்தர் எழுதிய போகர் 7000 என்ற நூலில் இருந்து அறிகின்றோம். போகர் சித்தர் பல முறை சீனா சென்று வந்ததைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். அதேபோன்று புலிப்பாணி சித்தரும் சீனாவிற்குச் சென்றதை குறிப்பிடுகின்றார். இந்தப் பகுதி இவ்விருவரை பற்றியும், அவர்களிடையே இருந்த குரு சீடன் என்ற உறவைப் பற்றியும் மேலும் புலிப்பாணி சித்தர் அவர்களின் சீனப் பின்னணி பற்றியும் விளக்க உள்ளது.

இந்தப் பகுதி போகர் ஏழாயிரத்தில் உள்ள பாடல்களை புலிப்பாணி என்ற சொற்கள் வரும் பாடல்களை ஆராய்ந்து பல கருத்துகளை வெளியிட்டுள்ளது. இந்நூலில் புலிப்பாணி என்ற பெயர் 315 முறை வந்துள்ளது. அது பல்வேறு சூழ்நிலைகளை விளக்குகிறது. அந்த சூழலை ஆய்ந்து புலிப்பாணி சித்தருக்கும் போகர் சித்தருக்கும் இடையேயான தொடர்புகளைப் பற்றி இந்தப் பகுதி விளக்குகிறது.

## சீனாவில் புலிப்பாணி சித்தர்

போகர் சித்தர் சீனாவிற்கு பலமுறை சென்று வந்ததை தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். அது மட்டுமல்லாமல், தன்னுடைய சீடரான புலிப்பாணி சித்தரும் சீனாவிற்கு வந்து போனதைப் பற்றி எழுதியுள்ளார். அதைப் பற்றிய விவரங்களை இந்தப் பகுதி, புலிப்பாணி சித்தரின் பிறப்பு, அவரது வேங்கை மேல் பவனி, போகர் சித்தர் குருவாகவும் தந்தையாகவும் இருந்தது, போகர் சித்தர் உடன் சீனாவிற்கு சென்றது, சீனாவில் அவரது பணி, புலிப்பாணி சித்தரின் குணங்களைப் பற்றி போகர் சித்தர் கூறுவது,

அவருக்கு போகர் சித்தர் கொடுத்த நூல்கள், அவர் காலாங்கி சித்தரிடமும் போகர் சித்தரிடமும் பெற்ற உபதேசங்கள், புலிப்பாணி சித்தர் மரபு மற்றும் புலிப்பாணி சித்தரின் சீனப் பின்னணி என்ற தலைப்புகளில் பல கருத்துக்களைத் தெரிவிக்கிறது.

## புலிப்பாணி சித்தரின் பிறப்பு

போகர் சித்தர் பல சித்தர்களின் பிறப்புகளை குறிப்பிடும்போது, புலிப்பாணி சித்தர் புரட்டாசி மாதம், நாலாம் காலத்தில் பிறந்தார் என்பதை ஒரு பாடல் மூலம் வெளியிடுகின்றார்.

***உள்ளபடி நீபிறந்த மாதமப்பா***
***வுத்தமனே புரட்டாசி யென்னலாகும்***
கள்ளமிலா ஜொதியென்ற நாலாங்காலாம்
கருத்துடனே ***யவதரித்த சித்துமாச்சே*** ***(5894)***

## போகர் சித்தர் கூறும் புலிப்பாணி சித்தர் வேங்கையின் மேல் பவனி வரும் பாணி

புலிப்பாணி சித்தர் எப்போதுமே வேங்கை மீது வீற்றிருந்து பல இடங்களுக்கும் சென்று வருவதை பல பாடல் வரிகளில் தெரிவித்துள்ளார். அவற்றில் சில பாடல்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

சிசுவான பாலகனே நீதானப்பா
சிறப்பான காலாங்கி கடாட்சத்தாலே
பசுபோலே ***வேங்கைதனை வாகனமுமாக்கி***
***பாரினிலே சுற்றிவந்த பாலனாகும்***
***(5896)***

செய்திட்டார் என்றலுமே எனக்குரைத்த
தெளிவான வதிசயத்தை சொல்வேன்பாரே
***வையகத்தில் வேங்கைதனில் வீற்றிருக்கும்***
***வளமான புலிப்பாணி சித்தேகேளும்*** ***(3864)***

வண்மையுடன் வெகுகாலம் லோகந்தன்னில்
***வளமையுடன் வேங்கையின் மேலேறிக்கொண்டு***
திண்மையுடன் வலசாரியா இடசாரியாக
*திறமுடனே சுத்திவந்த சித்தனப்பா* *(3639)*





## புலிப்பாணி சித்தரின் தந்தையாக போகர் சித்தர்

போகர் சித்தர் புலிப்பாணி பற்றி கூறும் போது தான் அவருக்குத் தந்தையைப் போல் இருந்ததைப் பல இடங்களில் சுட்டிக் காட்டுகின்றார். மைந்தா கேளு, கண்மணியே கண்ணேயப்பா, எந்தன் பாலா, எந்தன் மாரா என்ற சொற்களின் மூலம் அவற்றை வெளிப்படுத்துகின்றார். அந்தச் சொற்கள் எத்தனை முறை வந்துள்ளது என்பதும், எந்தப் பாடலில் வந்துள்ளது என்பதும் கீழேத் தரப்பட்டுள்ளன.

தானான புலிப்பாணி ***மைந்தாகேளு*** *(5032)*

***மைந்தாகேளு*** *(630 முறை)*

***கண்மணியே*** *(3849) (52 முறை)*

***கண்ணேயப்பா*** *(5143)*

***எந்தன் பாலா*** *(5231)*

*எந்தன் மாரா* *(6894)*

## போகர் சித்தர் சீடனாக புலிப்பாணி சித்தர்

தந்தையாக மட்டுமல்லாமல் புலிப்பாணி சித்தரைத் தன்னுடைய சீடனாக ஏற்றது பற்றியும் பாடல்களிலே கூறியுள்ளார் போகர் சித்தர். அதில் சில பாடல்கள் கீழேத் தரப்பட்டுள்ளன.

மானான யின்னமொரு மார்க்கம்பாரு
*தன்மையுள்ள என்சீஷன் ஒருவனப்பா*
*தேனான புலிப்பாணி யென்னுஞ்சித்தன்* *(3638)*

*நிசிதமுடன் எந்தனுக்கு சீஷனாக்கி*
நிஷ்களங்க மானதொரு புத்திவானாய்
விசுவாச முள்ளதொரு பாலனாக
மேதினியில் வந்துதித்த சித்துமாச்சே *(5896)*

## போகர் சித்தருடன் புலிப்பாணி சித்தர் சீனாவிற்குச் சென்றது

போகர் சித்தர் சீனாவிற்குத் தான் அடிக்கடி சென்று வந்ததை பல இடங்களில் கூறியிருக்கின்றார். அப்படிக் கூறும்போது புலிப்பாணி சித்தரையும், தன்னைப் போன்றே சீனாவிற்குச் செல்லுமாறு கூறும் பாடலும் உண்டு. அப்படி அவர் செல்லத் தேவையான குளிகையையும் தருவதாக கூறும் பாடலும் உண்டு. அந்த இரு பாடல்களும் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.

ஓதவே காயாதி கற்பந்தன்னை
வுத்தமனே யுந்தனுக்கு உரைத்தேனப்பா
நீதமுடன் காயாதி கற்பமுண்டு
நீணிலத்தில் நீயுமொரு சித்தனைப்போல்
தோதகமாய் என்காலஞ் சென்றபின்பு
துப்புரவாய் லோகாதி லோகமெல்லாம்

சாதகமாய்த் தான்திரிந்து மைந்தாநீயும்
***சட்டமுடன் சீனபதிக் கேகுவீரே*** **(6417)**

ஏகவே யுந்தமக்கு வரமுந்தந்தேன்
எழிலான மகிமையெல்லாந் தானுரைத்தேன்
போகவே குளிகையது பூண்டுகொண்டு
பொங்கமுடன் காயாதி கற்பமுண்டு
சாகாம லிருப்பதற்கு வினயங்கொண்டு
சட்டமுடன் காயாதி கற்பந்தன்னை
***ஆகாயந் தனிற்செல்ல குளிகைதானும்***
***அப்பனே யுந்தமக்கு தந்திட்டேனே*** **(6418)**

## சீனாவில் புலிப்பாணி சித்தர்

சீனாவிற்குச் சென்று புலிப்பாணி சித்தர் என்ன செய்தார் என்பதைப் பார்க்கும் போது, சீன நாட்டில் அரசு உத்தியோகத்தில் அவர் பணி புரிந்தார் என்று சொல்லும் வகையில் உள்ள பாடல் இங்கே கீழே தரப்பட்டுள்ளது.

தானான எந்தனிட போகநாதா
தன்மையுள்ள கண்மணியே யின்னஞ்சொல்வேன்
தேனான தெள்ளமுர்த சிவராஜயோகா
***சீனபதிக்கரசுள்ளதீரா*** **(3849)**

## புலிப்பாணி சித்தரின் குணங்களைக் கூறும் போகர் சித்தர்

புலிப்பாணி சித்தரின் குணங்களைப் போகர் சித்தர் பல பாடல்களிலே குறிப்பிட்டுள்ளார். அந்தக் குணங்களும் அது வரும் பாடல்களையும் கீழே காணலாம்.

பாரப்பா, ஆச்சப்பா, அப்பனே என்று ஒருபுறம் கூற, கணிதவானே (6735), பளிங்குள்ளானே (6742), கவிராஜேந்திரா (6743), புகழுள்ளானே (6744), அறிவுள்ளானே (6782), தயவுள்ளானே (6790), புனிதவானே (6803), பண்புள்ளானே (6814), அன்புள்ளானே (6847), புண்ணியவானே (6853),

குணமுள்ளானே (6861), கவிவல்லோனே (6862), இன்புள்ளானே (6879), கனவானே (6889), கண்ணியவானே (6910), தகமையோனே (6910), செல்லவானே (6980)என்று அவரது பண்பு நலன்களைக் கூறுகிறார்.

## புலிப்பாணி சித்தருக்கு போகர் சித்தர் கொடுத்த வரங்கள்

தன்னுடையச் சீடரான புலிப்பாணி சித்தருக்கு, போகர் சித்தர் பல வரங்களை அளித்துள்ளார். அப்படிப்பட்ட வரங்களிலே, அவர் மதி மந்திரியாக இருக்க வேண்டும் என்றும், வேதாந்த உபதேச உண்மைகளைச் சொல்லிக் கொடுத்து நீடூழி வாழவேண்டும் என்றும், எந்நாளும் நீதியுடன் மகேஸ்வரி பக்கம் நிற்பாள் என்றும், அவருக்கு நாட்டினிலே நல்ல பெயர் உண்டாகும் என்றும், நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் சதாகாலம் போற்றுவார்கள் என்றும், பல சித்தர்கள் அவருக்கு வரங்கள் தருவார்கள் என்றும் பாடல்களில் குறிப்பிடுகின்றார். அந்த பாடல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

*கொடுத்துமே யுந்தனுக்கு சோடசாரம்*
*கொற்றவனே மதிமந்திரி யாகக்கொள்வார்* **(5500)**

*வேணதொரு நீதிமுறை பாடுகூறி*
*வேதாந்த வுபதேச உண்மைகூறி*
*நீணவே யுந்தனுக்கு உபதேசித்தேன்*
*நீடாழி பதவிதனை யாளுவீரே* **(6781)**

*குருவான குருவிவர்தா னென்றுசொல்லி*
*கொற்றவனே யுந்தனையும் பணிகுவார்பார்*
*திருவான மாமுனியின் கடாட்சத்தாலே*
*சித்திக்கும் அஷ்டசித்து கைக்குள்ளாகும்*
*நிருவாணி மஹேஸ்வரியாள் எந்தநாளும்*
*நீதியுடன் வுன்பக்கல் நிற்பார்பாரே* **(5476)**

*நன்னயமாய் வேதாந்த சித்துவென்று*
*நாட்டினிலே யுந்தமக்குப் பேருண்டாகும்*
*பன்னவே பலபேரும் போற்றுவார்கள்*
*பாலகனே நீயுமொரு சித்தனாமே* **(5235)**

*கருமமது பொய்யாது வுந்தனுக்கு*
*காசினியில் நீயுமொரு நீதனாவாய்*
*பருமமுடன் வையகத்தில் மாண்பர்க்கெல்லாம்*
*வளமையுடன் குருசம்பர போதவானாய்*
*அருமையாய் எல்லவரும் உந்தனைத்தான்*
*அப்பனே சதாகாலம் போற்றுவாரே* **(5027)**

திரிவான ஆமியவள் முன்னேநிற்பாள்
திக்கெல்லாம் மெச்சுதற்கு சித்தனாவாய்
மருவான நாதாக்கள் ரிஷிகள்தாமும்
மதிப்புடனே உந்தனுக்கு வரமுமீவார் **(3140)**

## புலிப்பாணி சித்தருக்கு போகர் சித்தர் ஞானப்பால் ஊட்டல்

புலிப்பாணி சித்தருக்கு ஞானப்பால் ஊட்டும் வகையில் போகர் சித்தர், இறைவனின் பாதங்களை அடைய எண்ண வேண்டும், உலகிலே பவக்கடலை அகற்ற வேண்டும், நாலு பதங்களில் மேலான பதமான பொற்பதத்தை அடைய எண்ண வேண்டும் என்று கூறுகிறார்.

பாலான ஞானமென்ற பாலையப்பா
பகருகிறேன் புலிப்பாணி பளிங்குள்ளானே
மேலான பதந்தனையே நண்ணவேண்டும்
மேதினியில் பவக்கடலை யகற்றவேண்டும்
நாலான பதந்தனக்கு மேலேயப்பா நற்பதமாம்
பொற்பதத்தை நண்ணல்வேண்டும்
காலான சிதாபாசப் பொருளையப்பா
கருதுவேன் உந்தமக்கு கருதுவேனே (6742)

## புலிப்பாணி சித்தருக்கு போகர் சித்தர் கொடுத்த புத்திர வரம்

மற்ற வரங்களைத் தவிரவும், புலிப்பாணி சித்தருக்கு போகர் சித்தர், புத்திர வரமும் அளிக்கின்றார். அப்படி ஒரு பாடலும் போகர் ஏழாயிரத்தில் உள்ளது. மகப்பேறு மெத்த உண்டு என்று கூறி, பல பிள்ளைகள் அவருக்கு உண்டு என்பதை குறிப்பிடுகின்றார்.

பணியவே சத்தகன்னி ஜங்கன்தானும்
பட்சமுடன் மனதுவந்து மனங்களித்து
மணியான மைந்தனல்லோ வுனக்குண்டாகும்
***மகப்பேறு மெத்தவுண்டு யுந்தனுக்கு***
கணிதமுடன் குறியுரைத்தேன் மைந்தாபாலா
கட்டழகி யுன்தேவி இன்றுமட்டும்
துணிவுடனே இருபத்தோர் வாரமப்பா
துப்புரவாய் பூசைமுகம் வரச்சொல்வீரே (5979)

## போகர் சித்தர் சொல்லும் புலிப்பாணி சித்தருக்கு கொடுத்த நூல்கள்

தன்னுடைய சீடரான புலிப்பாணி சித்தருக்கு, தான் இந்த போகர் 7000 என்ற நூலைத் தருவதாக பல பாடல்களில் தெரிவிக்கின்றார். அந்தப் பாடல்களில் சில கீழே தரப்பட்டுள்ளன.

***தேடியதோர் பொருளப்பா சத்தகாண்டம்***
***தெளிவான யேழாயிரங் காவியத்தை***
***பாடியே யுந்தனுக்கு தத்தமாக***
***பட்சமுடன் யான்கொடுத்த பெருநூலப்பா*** (6963)

***வேமேதான் வெகுநூல்கள் பார்த்துமேதான்***
***விருப்பமுடன் இந்நூலை யுந்தனுக்கு***

*தாமேதான் குருநூலாய்ப் பொருள்கள்கண்டு*
*தக்கபடி செய்தேனே தரணியோர்க்கே* **(5005)**

கோனான *மாரணத்தால் மடிந்தோர்தம்மை*
*கொற்றவனே எழுப்புதற்கு மார்க்கஞ்சொல்வேன்*
தேனான மனோன்மணியாள் பாதம்போற்றி
செப்புவேன் மாணாக்கள் பிழைக்கவென்று
***பானான சாத்திரத்தின் யுயிரெழுத்தை***
***பாருலகில் பாடுகிறேன் பண்பாய்த்தானே*** **(5682)**

***வேரணியாய் தர்மிகட்கும் புண்ணியர்க்கும்***
***வேணவுப சாரமுடன் கொடுப்பாய்தானே*** **(5006)**

## புலிப்பாணி சித்தர் காலாங்கி சித்தரிடம் பெற்ற உபதேசம்

போகர் சித்தரின் குருவான காலாங்கி சித்தரிடமிருந்தும் புலிப்பாணி சித்தர் உபதேசம் பெற்றதாக ஒரு பாடல் கூறுகிறது.

***தேனான புலிப்பாணி யென்னுஞ்சித்தன்***
தேசத்தில் வேங்கையதை வாகனமாக்கி **(3638)**

கோனான எனதையர் காலாங்கிநாதர்
கொற்றவனார் தன்னிடத்தில் சென்றுமேதான்
***மானான வுபதேசம் பெற்றுக்கொண்டு***
மானிலத்தில் செய்ததொரு வன்மைபாரே **(3638)**

## புலிப்பாணி சித்தருக்கு போகர் சித்தர் செய்த உபதேசங்கள்

சீடனாக இருந்தால் பல உபதேசங்களை குரு செய்தாக வேண்டும். அப்படி அந்தச் சீடனுக்கு குரு செய்த உபதேசங்களையும் பல பாடல்களிலிருந்து நாம் அறிகிறோம். அதிலே குரு மந்திரம், தேவதா மந்திரம், மூல மந்திரம், பிரணவ மந்திரம், நாதாக்கள் செய்யும் வேதை, சிடிகை வேதை,

வாசியோகம், விலாங்கு கர்ப்பம் செய்யும் முறை, நீதி போதனை, தேசிவித்தை, இந்திரஜாலம், வினோத வித்தை, மதியானஜாலம், போன்ற பல விஷயங்களை அவர் உபதேசித்து இருக்கிறார்.

*ஒண்ணான குருமந்திரம் தேவதாமந்திரம்*
*வுத்தமனே புலிப்பாணி யுந்தனுக்கு*
*திண்ணமுடன் உபதேசஞ் செய்தேனப்பா* (5653)

*சுந்தரனே நாதாக்கள் செய்யும்வேதை*
சத்தியமாய் யானறிந்த மட்டுமல்லோ
*தண்மைபெற வுந்தனுக்கு வோதினேன்யான்* (6443)

நேரப்பா யுந்தனுக்கு *சிடிகைவேதை*
*நேர்மையுடன் நானுரைப்பேன் நீதியாக* (6556)

காணவே சத்தகாண்ட மேழினுள்ளே
கருவான கடைக்காண்டம் தன்னுக்குள்ளே
*பூணவே சிடிகையென்ற நுணுக்கமப்பா*
*புகட்டினேன் புலிப்பாணி மைந்தாகேளு*
ஆணவங்கள் தானொடுங்கி மைந்தாநீயும்
*வப்பனே சித்தாதி முனிவர்க்கெல்லாம்*
*நாணலுடன் முடிவணங்கி கரங்குவித்து*
*நற்பாத கமலமதை வணங்குவாயே* (6013)

*மூச்சடங்கி வாசியோகஞ் செய்வதற்கு*
முனையான காயாதி கற்பமெல்லாம்
வாச்சுதே புலிப்பாணி மன்னாகேளு
*வளம்பெறவே யுந்தனுக்கு யோகங்காண*
மாச்சலென்ற யோகநிலை யுந்தமக்கு
*மகத்தான மகிமைகளும் போதித்தேனே* (6410)

*தண்ணமுடன் தேகமது இறுகிக்காட்டும்*
*தாக்கான வாசியது மேல்நோக்காது*

கண்ணபிரான் செய்ததொரு குளிகையப்பா
*கண்மணியே வுந்தனுக்கு போதித்தேனே* ***(6390)***

புகட்டினேன் உந்தனுக்கு வன்புகூர்ந்து
*புகழான விலாங்கினது கற்பந்தன்னை*

...............

*சுகம்பெறவே யடியேனும் மனதுவந்து*
*சூட்டினேன் மாண்பர்களுக் குகந்தவாறே* ***(6395)***

*நீடியே யுந்தனுக்கு வாதங்காண*
*நீதியுடன் போதித்தேன் உண்மைதானே* ***(6516)***

*தேனான வித்தையிது தேசிவித்தை*
ஜெகதலத்தில் கோடிபேர் மயங்குவார்கள்
பானான பராபரியாள் *கடாட்சத்தாலே*
*பாலகனே யுந்தனக்கு யோதினேனே* ***(5061)***

*தேனான ஜாலமது இந்திரஜாலம்*
*தேற்றமுடன் யுலகுதனில் செய்வாய்பாரே* ***(5067)***

காண்பித்தார் மாண்பருக்கு *வினோதவித்தை*
களிப்புறவே போகரிஷி நாதர்தாமும்
ஆண்பிள்ளை புலிப்பாணி எந்தன்பாலா ***(5231)***

*மதியான ஜாலமொன்று சொல்வேனப்பா*
*மகத்தான காலாங்கி நாதர்தம்மை*
*துதியுடனே தான்வணங்கி துய்யபாலா*
*துப்புரவாய் யுந்தனுக்குக் கூறுவேன்யான்* ***(5034)***

ஆச்சப்பா *மந்திரமாம் மூலமந்திரம்*
*வப்பனே கண்டவர்க்கு எல்லாஞ்சித்தி*
*மூச்சடங்கிப் போனதொரு பிசாசுதந்திரம்*
*முனையான பிரணவத்தால் பேசலாகும்*
*கூச்சலுடன் தலைசுழட்டி யாடும்பேய்கள்*

*கொப்பெனவே பிரணவத்தை கண்டாலோடும்*
*ஆச்சரிய மானதொரு மாடன்மந்திரம்*
*வப்பனே போகரிஷி வசனித்தேனே* *(5634)*

இவை தவிரவும், சவத்தை எழுப்பும் மந்திரத்தையும் கற்றுத் தந்துள்ளார். மேலும் தன்னுடைய குருவான காலாங்கி நாதரையும், இன்னும் மற்ற சித்தர்களையும் வணங்கி நடக்க வேண்டும் எனும் அறிவுரையையும் கொடுத்துள்ளார்.

பண்பான அதர்வணத்தால் மடிந்தோர்தம்மை
பாலகனே விதிப்படியே கொண்டுவந்து
நண்பான மசானமென்ற கரையிலப்பா
நாயகனே ***சடங்கதுபோல் சவத்தைத்தானும்***
திண்மையுடன் தானிறுத்தி காவலோடும்
தீரமுடன் காளியின்தன் வசியத்தாலே
உண்மையாய் பிரணவத்தை யுச்சாடிக்க
***வுத்தமனே வுயிரதுவும் வருகும்பாரே*** ***(5683)***

இட்டேனே புலிப்பாணி மைந்தாகேளு
***எழிலான கற்பமதை யாருக்குந்தான்***
தொட்டகுறி போலாகச் சொல்லிவந்தேன்
துரைராஜ சுந்தரனே யுந்தமக்கு
விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால்
***விருப்பமுடன் உந்தனுக்கு யுபதேசித்தேன்*** ***(6439)***

தானான புலிப்பாணி மைந்தாகேளு
தப்பாமல் எந்தனுக்கு குருதானப்பா
***தேனான காலாங்கி நாதர்தம்மை***
***தேற்றமுடன் சதாகாலம் மனதிலுன்னி***
பானான மனோன்மணியாள் பாதம்போற்றி
***பான்மைபெற எப்போதும் தொழுதுமல்லோ***
கோனான குருக்கள்மார் ரிஷிகள்தம்மை
கொற்றவனே ***தான்நினைந்து நடத்துவாயே*** ***(5032)***

## போகர் சித்தர் புலிப்பாணி சித்தரை சமாதியில் சேரச் சொல்லுதல்

தான் சமாதியில் சென்று இன்புற்று இருந்ததைக் கூறி, அதேபோன்று புலிப்பாணி சித்தரையும் சமாதியில் சென்று சேரச் சொல்கின்றார். அத்தகையப் பாடல்களையும் நாம் இந்த நூலிலே காண்கின்றோம்.

அடங்கியே சமாதிதனில் ஒடுக்கமாகி
அவனிதனில் ஆசைதனை விட்டொழித்து
***தடங்கண்டு சீனபதிசமாதிபூண்டு***
***தாரிணியில் இருக்குமந்த காலந்தன்னில்***
உடங்கொண்டு எந்தனையம் சமாதிக்கேக
வுத்தமனார் தாமுரைத்தார் எந்தனுக்க
படமுடனே யவர்பக்கல் யானுஞ்சென்று
பாரினிலே வாசையெல்லாம் மறந்திட்டேனே ***(3806)***

மறந்திட்டேன் லோகாசைதனை வெறுத்து
***மார்க்கமுடன் அவர்பக்கல் சமாதிபூண்டேன்***
***...........***
***பறந்திட்ட பூமிதனை விட்டொழித்து***
***பாங்குடனே சமாதியிடஞ் சேருவீரே (3807)***

***தென்றிசையில் கும்பமுனி சமாதிபக்கல்***
***தேற்றமுடன் சமாதிமுகங் கொள்வீர்தானே (6973)***

## புலிப்பாணி சித்தரின் வேங்கை சாபம் நீங்குதல்

அப்படி அவர் சமாதியில் அமர இடம் தேடிய போது, நாதாந்த முனியின் சமாதியின் பக்கம் செல்ல நேர்ந்தது. அப்போது அவர், புலிப்பாணி சித்தரின் வேங்கை சாபத்தை நீக்கி உபதேசங்கள் செய்து நீண்ட காலம் நிலத்தில் வாழ ஆசீர்வாதம் செய்துள்ளார் என்றும் போகர் சித்தர் கூறுகிறார்.

புண்ணயனே பேர்சொன்னபடியாலப்பா
    ***பூதலத்தில் உந்தனுக்குவேங்கைசாபம்***
***திண்ணமுடன் தீர்த்துமல்லோ யுந்தனுக்கு***
    தீரமுட னுபதேசம் செய்வேனென்றார்
வண்ணமுடன் உபதேசம் பெற்றுமல்லோ
    வானுலகில் எமனுக்கு இடமில்லாமல்
கண்ணபிரான் தன்னைப்போல் வாழும்பெற்று
    காசினியில் வெகுகால மிருவென்றாரே **(3647)**

## புலிப்பாணி சித்தர் வயது

போகர் சித்தர் தன் சீடன் புலிப்பாணி சித்தர் அறுநூறு வயது வரை வாழ்ந்தார் என்பதை ஒரு பாடல் மூலம் கூறுகின்றார்.

பாரப்பா புலிப்பாணி பாலனான
    பட்சமுடன் உந்தனுக்கு வயதுசொல்வேன்
ஆரப்பா வயததுவும் அறுநூறாண்டு
    வப்பனே வையகத்தி லிருந்தசித்து
நேரப்பா சமாதிமுகஞ் சென்றதில்லை
    நேர்மையுடன் நெடுங்கால மிருந்தசித்து
சீரப்பா சிவயோகந் தன்னிற்சென்று
    சிறப்புடனே சின்மயத்தி லிருந்தசித்தே **(5779)**

## புலிப்பாணி சித்தரின் மறைவு

போகர் சித்தர் தன்னுடைய சீடரான புலிப்பாணி சித்தரின் மறைவு பற்றியும் இரண்டு பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அவர் எப்படியும் சமாதியில் இருந்து திரும்பவும் வர வேண்டியவரே. ஆனாலும் இந்தப் பாடல் மூலம் அவர் மாண்டார் என்று குறிப்பிடும்போது, அவருக்கு ஒரு பிறப்பு மட்டுமே இருந்ததாக கூட நாம் கொள்ளலாம்.

இல்லையே சித்துமுனி பாலன்தானும்
எழிலான மண்ணுக்கு இறையேயானார்
அல்லல்மிக பட்டுமல்லோ அவனிதன்னில்
அப்பனே அவருமல்லோ மாண்டுபோனார்
கல்லான தேகமிது என்றிருந்தார் காசினியில்
அவர்தேகம் மண்ணாய்ப்போச்சு
புல்லான புல்லோடே புழுதியாகி
***பூதலத்தில் புலிப்பாணி மாண்டார்பாரே*** (3651)

பாரேதான் வுலகமிதில் சித்துயாவும்
பாங்காகக் கற்றறிந்து யிருந்துமென்ன
நேரான சிவயோகந்தன்னில்நின்று
நிஷ்டையிலே தானிருந்து பலனுமென்ன
கூரான குறிப்பறிந்து குவலயத்தில்
கொற்றவனே காயகற்பம் கொண்டுமென்ன
வீரான தேகமது விழலாய்ப்போச்சு
***விருத்தமுட னிப்படியே மாண்டார்தானே*** (3652)

## புலிப்பாணி சித்தரின் மரபு

சித்தர்களுக்கு மரபு வழி உண்டு. அதை போகர் சித்தர் புலிப்பாணி மரபு உண்டு என்பதையும், அந்த மரபில் வந்தவர்கள் வேட ஜாதியைச் சார்ந்தவர்கள் என்றும், அவர்களுக்கு ஒன்பது தலைமுறைகள் இருந்தன என்றும் குறிப்பிடுகின்றார்.

சொல்வாரே புலிப்பாணி மைந்தாகேளு
சுத்தமுள்ள கண்மணியே புகல்வேன்பாரு
வல்லான ***புலிப்பாணி மரபேதந்தான்***
மார்க்கமுடன் வேடனது ஜாதியல்லோ
***புல்லான தலைமுறைகள் ஒன்பதாகும்*** (5708)

இன்று வரையிலும் அந்த சித்தர் மரபு இருந்துதான் வருகிறது. பழனி மலையிலே புலிப்பாணி ஆதீனத்தார், புலிப்பாணி சித்தர் அவர்களின் கருவழி மரபு என்று இன்று வரையிலும் அவருடைய இலக்கியங்களை பாதுகாத்தும், போகர் சித்தருடைய சமாதியை பாதுகாத்தும், வருடந்தோறும் விசேடங்களை செய்து கொண்டும் இருக்கிறார்கள்.

புலிப்பாணி சித்தர் எழுதிய நூல்கள் விவரம் இந்தப் பகுதியின் கடைசியில் தரப்பட்டுள்ளது.

ஆடி மாதத்திலே சித்தர்கள் எழுதிய இலக்கியங்களைக் கொண்ட ஓலைச்சுவடிகளை வைத்து வணங்கும் போது, ஒரு சிறு சிலையையும் வைத்து வணங்குகிறார்கள். அந்தச் சிலை ஒரு சீனரின் உருவச்சிலை. அந்த சிலை போ-யாங் (Bo-yang) என்று பெயர் கொண்டதாகச் சொல்கிறார்கள். சீனாவில் போ-யாங் என்ற பெயரில் இருவர் இருந்திருக்கிறார்கள். ஒருவர் தவோ மதத்தை சீனாவிற்கு அறிமுகப்படுத்திய லவோ ட்சு என்ற ஞானி. மற்றொருவர் ரசவாதத்தையும் மூலிகை மருந்துகளை பற்றியும் எழுதிய வெய் போ-யாங் (Wei Bo-yang) இருவருமே போகர் சித்தரின் இரு பிறப்புகள் என்று நாம் சொல்லும் வகையில்தான் இந்தச் சான்றுகள் இருக்கின்றன.





போகர் சித்தர் அறிமுகப்படுத்திய கொள்கைகளை, ஜாங் டவோலிங் (Zhang Daoling) என்பவர் மேல் எடுத்துச் சென்று, அதை தவோ மதமாக உருவாக்கினார். இன்று வரையிலும் சீனா, ஹாங்காங், தைவான், மகாவ் போன்ற சீனப் பகுதிகளும், கிழக்காசிய நாடுகளிலும், பல மக்கள், உருவ வழிபாட்டை செய்து வாழ்ந்து வருவதை நாம் காண்கின்றோம். அந்த ஜாங் டவோலிங் என்பவர்தான் புலிப்பாணி சித்தராக இருக்க அதிக வாய்ப்புள்ளது. ஏனென்றால் போகர் சித்தரின் சீடர் புலிப்பாணி அல்லவா?

அவர்களுடைய மரபினர்களும், இன்று வரையிலும் தைவானில் இருக்கின்றார்கள். குருமார்கள் விண்ணக குரு (Tianshi dao -Celestial Master) என்று அழைக்கப்படுகின்றனர். இப்போது இருக்கும் குரு 65 ஆவது குரு என்று கூறப்படுகிறது. தவோ மதக் கொள்கைகளை இன்று வரையிலும் பின்பற்றி, அதை இளைய தலைமுறையினருக்கும் கற்றுத் தருகிறார்கள்.

## புலிப்பாணி சித்தரின் சீனப் பின்னணி

புலிப்பாணி சித்தரின் சீனப் பின்னணியை ஆய்வு செய்தோமேயானால், சீனாவில் சாகாவரம் பெற்ற மாந்தர்களில் ஒருவராக ஜாங் டவோலிங் என்பவர் உள்ளார். அவர் எப்போதுமே புலியில் பவனி வருவதைப் போன்றுதான் படங்களிலும், சிலைகளிலும் சுட்டிக் காட்டப்படுகிறார். அதனால் புலிப்பாணி சித்தரின் சீனப் பிறப்பு என்று கொள்ளலாம். மேலும் ஹாங்காங்கில் உள்ள கோயில்களில் தவோ மதத்தினர் இந்த ஜாங் டவோலிங் என்பவர் புலியின் மேல் அமர்ந்த வண்ணம் இருக்கும் உருவச் சிலையை வணங்கி வருவதும் இதற்கு ஒரு சான்றாக அமைகின்றது. புலிப்பாணி சித்தரும் ஒரு சீனப் பின்னணியை கொண்டவர் என்பதை நாம் அறிகிறோம்.

போகர் சித்தரை குருவாகக் கொண்ட புலிப்பாணி சித்தரை பற்றி இந்தப் பகுதி அவரது பிறப்பு முதல் இறப்பு வரை








தந்துள்ளது. போகர் சித்தர் புலிப்பாணி சித்தருக்கு என்ன கற்றுக் கொடுத்தார், அவரை எப்படி நடத்தினார், அவருடைய குணங்கள் எப்படி என்பதைப் பற்றி பல பாடல்கள் மூலம் தெரிவிக்கின்றார். அத்தகைய பாடல்களைக் கொண்டது இந்தப் பகுதி. புலிப்பாணி சித்தரின் இலக்கியங்களைப் பற்றி மேலும் ஆய்வு செய்தால் இன்னும் அவருடைய சீனப் பின்னணியைப் பற்றி நாம் அறியலாம்.



# போகர் சித்தரின் குருவாக, தோழராக சீனாவில் கமலமுனி சித்தர்

# (Kamalamuni as Bhogar's Master and friend)




**சி**த்தர்கள் சித்து வேலை செய்வதோடு அல்லாமல், அவர்கள் உலகெங்கிலும் பறந்து சென்று, பல நாடுகளில் வாழ்ந்ததாக நம் சித்தர் இலக்கியங்கள் மூலம் நாம் அறிகிறோம். அப்படி பதினெட்டு சித்தர்களில், சீனாவில் வாழ்ந்த சித்தர்களாக நால்வர் சொல்லப்படுகின்றனர். காலாங்கி சித்தர், போகர் சித்தர், புலிப்பாணி சித்தர் மற்றும் கமலமுனி சித்தர் ஆகியோர் சீனாவில் வாழ்ந்ததாகப் போகர் ஏழாயிரத்தில் போகர் சித்தர் குறிப்பிடுகின்றார். இவர்களில் கமலமுனி சித்தரைப் பற்றி போகர்-7000 என்ன கூறுகின்றது என்பதை இந்தப் பகுதி விளக்குகிறது.

சித்தர் இலக்கியங்களில் பதினெண் சித்தர்களில் சீனாவில் வாழ்ந்த சித்தர்கள் என்று குறிப்பிடப்படுபவர்களில் கமலமுனி சித்தர் ஒருவர். இவர் போகர் சித்தரின் சீடராக இருந்தார் என்று கூறப்படுகிறது. ஆனால் போகரின் 7000 என்ற நூலின்படி போகர் சித்தருக்கு கமலமுனி சித்தர் குருவாக இருந்ததாக ஒரு பாடல் வரி கூறுகின்றது. மேலும் போகர் ஏழாயிரத்தில் பல இடங்களில் கமலமுனி சித்தர் குறிப்பிடப்படுகின்றார். கமலமுனி சித்தர் சீனாவில் எப்படி இருந்தார், அவரது பிறப்பு இறப்பு, போகர் சித்தருக்கு, கமலமுனி சித்தர் எவ்வளவு சிறந்த நண்பராக இருந்தார் என்பது போன்ற கருத்துக்களைக் கொண்ட பாடல்களை இந்தப் பகுதி விளக்கும். மேலும் கமலமுனி சித்தரின் சீனப் பின்னணி பற்றியும் விளக்க உள்ளது.

இந்தப் பகுதி போகர் ஏழாயிரத்தில் உள்ள பாடல்களில் ‘கமலமுனி’, ‘கமலர்’ மற்றும் ‘கமல’ என்ற சொற்கள் வரும் பாடல்களை ஆராய்ந்து, பல கருத்துகளை வெளியிட்டுள்ளது. இந்நூலில் கமலமுனி(61) கமலர்(16) கமல(213) என்ற பெயர்கள் எத்தனை முறை வந்துள்ளன என்பது அடைப்புக்குறிக்குள் தரப்பட்டு உள்ளன. இந்தச் சொற்கள் பல்வேறு சூழ்நிலைகளை விளக்குகின்றன. அந்தச் சூழலை ஆய்ந்து, கமலமுனி சித்தர் மற்றும் போகர் சித்தருக்கும் இடையேயான தொடர்புகளைப் பற்றி இந்தப் பகுதி விளக்குகிறது.

## சீனாவில் கமலமுனி சித்தர்

கமலமுனி சித்தர் சீனாவிலேயே பெரும்பாலும் இருந்ததாக

போகர் 7000 நூல் மூலம் அறிகின்றோம். கமலமுனி சித்தரின் பிறப்பு, அவரும் காலாங்கி நாதரும் உடன் இருந்ததாகக் கூறப்படுவது, போகர் சித்தரின் குருவாக கமலமுனி சித்தர், போகர் சித்தர் கமலமுனி சித்தரை பல முறை வணங்கியது, சீனாவிற்கு சென்ற போதெல்லாம் அவரைச் சென்று கண்டது, கமலமுனி சித்தர் போகர் சித்தருக்கு செய்த உபதேசங்கள், கமலமுனி சித்தர் சமாதியில் அமர்ந்தது, கமலமுனி சித்தரின் சமாதியின் பக்கம் காத்திருந்தது, அவரது மறைவு, போகர் சித்தரின் சாபம் நீக்கியது, கமலமுனி சித்தரின் வயது மற்றும் கமலமுனி சித்தரின் மரபு என்ற பல தலைப்புகளில் இந்தப் பகுதியில் காணலாம். இறுதியாக கமலமுனி சித்தரின் சீனப் பின்னணியும் விளக்கப்பட்டுள்ளது.

## கமலமுனி சித்தரின் பிறப்பு

போகர் சித்தர் பல சித்தர்களின் பிறப்புகளைக் குறிப்பிடும் போது, கமலமுனி சித்தர் வைகாசி மாதம், ரெண்டாங்காலத்தில் பூச நட்சத்திரத்தில் பிறந்தார் என்பதை ஒரு பாடல் மூலம் வெளியிடுகின்றார். போகர் சித்தர், கமலமுனி சித்தர், காலாங்கி நாதரின் பேரனாக பிறந்ததாகவும் ஒரு பாடல் மூலம் தெரிவிக்கின்றார். போகர் சித்தர் அவரை வர்ணிக்கும்போது வயதுக்கு உகந்த சித்து ஞான ஒளி சித்து சின்மயானந்த சித்து என்று குறிப்பிடுகிறார்.

கூறவென்றால் கமலமுனி பிறந்தநேர்மை
கூறுவேன் ***வைகாசி திங்களப்பா***
***மாறலுடன் பூசமது ரெண்டாங்காலாம்***
மகத்தான கமலமுனி பிறந்தநாள்தான்
சீறலது வாராத ***தேவசித்து***
தெளிவுடைய ***வையகத்துக் குகந்தசித்து***
ஆறவே யொருவரால் கூறப்போமோ
***வப்பனே ஞானவொளி சித்துபாரே*** ***(5929)***

பாரேதான் சித்தொளியின் மகிமைபாரு
பாங்கான ***காலாங்கி பாட்டன்வர்க்கம்***
நேரேதான் வம்மிஷத்திற் ***பிறந்தசித்து***
நெடிதான ***சின்மயா னந்தசித்து*** ***(5930)***

## காலாங்கி சித்தருடன் கமலமுனி சித்தர்

போகர் சித்தரின் குருவான காலாங்கி சித்தருடன் கமலமுனி சித்தர் பல நாட்கள் இருந்ததாக ஒரு பாடல் மூலம் அறிகிறோம். காலாங்கி கமலமும் விற்பன்னர்கள் இருவருமாய் காலாங்கி கிரியில் வீற்றிருந்தனர் என்று சொல்வதின் மூலம் அதை அறிந்து கொள்ளலாம்.

***நிற்கையிலே காலாங்கி நாதர்தாமும்***
***நீடாழி யுலகமதைக் கண்டேயேங்கி***
***சொற்பமுடன் தன்மனதில் எண்ணியல்லோ***
***தோறாமல் காலாங்கி கமலர்தாமும்***
***விற்பனர்கள் இருவருமாய் காலாங்கிகிரியில்***
***வீற்றிருந்தார் மண்டலந்தான் நெடுநாளப்பா***
அற்பமுடன் வையத்து மாண்பர்தம்மில்
வனேகம்பேர் அம்மலையில் இருந்திட்டாரே ***(6864)***

## போகர் சித்தரின் குருவாக கமலமுனி சித்தர்

கமலமுனி சித்தர் சீனாவில் இருந்தபோது அவரைச் சந்தித்து அவரை வணங்கி அவருடைய உபதேசத்தைப் பெற்றதாக ஒரு பாடல் குறிக்கிறது.

தானதினால் ***கமலமுனி அங்கிருந்தார்***
***சாஷ்டாங்க தெண்டனிட்டு தாள்பணிந்தேன்***
***ஆனதினால் லெந்தனுக்கு உபதேசங்கள்***
அனேகமதாய் தானுரைத்தார் அதிசயந்தானே ***(1726)***

## சீனாவில் கமலமுனி சித்தர்

சீனாவில் கமலமுனி சித்தர் என்ன செய்தார் என்பதை நாம் பல பாடல்கள் மூலம் அறியலாம். கமலர் என்ற முனிவர் வெகுகாலம் வாழ்ந்து, திரைகடல் ஏழையும் சுற்றி பல நாடுகளிலுள்ள வளமை எல்லாம் கண்டு ஆராய்ந்து, தன்மையுடன் சீனபதி வந்து அமர்ந்து விட்டார் என்ற பாடல் மூலம் கமலமுனி சித்தர் சீனாவில் இருந்தார் என்பதை அறிந்து கொள்ளலாம். மேலும் கமலசித்து தாரணியில் அருமையுடன் சீனதேசம் தன்னில் சென்றார் என்றும் மற்றொரு பாடல் குறிப்பிடுகிறது. இருநூறு வருடங்கள் சீன தேசத்தில் சங்கம் உடன் வினோதங்கள் பல செய்து வாழ்ந்தார் என்ற பாடலையும் நாம் காண முடிகிறது.

வன்மையாங் ***கமலரென்ற முனிவரப்பா***
    ***வரைகோடி வெகுகால மிருந்தசித்து***
நண்மையாந் திரைகடலேழுஞ்சுத்தி
    நாட்டிலுள்ள வளப்பமெல்லாம் கண்டாராய்ந்து
தன்மையுடன் ***சீனபதி தந்துமல்லோ***
    தாக்கான ***பதிதேடி யமர்ந்திட்டாரே*** ***(3785)***

தருமமது தானறிந்த கமலசித்து
    தாரணியில் தானறிந்த கொடியசித்து
***அருமையுடன் சீனபதி தேசந்தன்னில்***
    ***வன்பாகச் சென்றதொரு சித்துபாரே*** ***(5840)***

ஆண்டான வருஷமது இருநூரப்பா
    ..................
தாண்டவம்போல் ***சீனபதி தேசந்தன்னில்***
    ***சாங்கமுடன் வினோதங்கள் செய்தசித்து***
ஆண்டகையாம் ஆனதொரு கமலர்தானும்
    வப்பனே வையகத்து சித்துமாச்சே ***(5842)***

## கமலமுனி சித்தரிடம் வைத்த மதிப்பு

கமலமுனி சித்தருக்கு போகர் சித்தர் பல முறை தன்னுடைய வணக்கங்களைச் செலுத்தியுள்ளார். சதகோடி சரணம், தாள் பணிந்தேன், பாதுகாப்பே, கடாட்சங்காணே, கமலமுனி சமாதிகள் தன்மையுடன் சென்று சேவை செய்தேன் என்ற வார்த்தைகள் மூலமாக கமலமுனி சித்தரைப் பற்றி, போகர் சித்தர் என்ன எண்ணம் கொண்டுள்ளார் என்பதை நாம் அறியலாம்.

பட்சமுடன் சதகோடி சரணஞ்சொன்னேன்
சீரேதான் அவர்பாதந் தொழுதுபோற்றி
சிறப்புடனே வஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன் ***(6983)***

மகத்தான கமலமுனி தாள்பணிந்தேன்
தேனான சதாசிவத்தி னடிபணிந்தேன்
தேற்றமுடன் காலாங்கி பாதங்காப்பே ***(6001)***

கோனான யெனதையர் காலாங்கிநாதர்
கொற்றவனார் குருபாத கடாட்சத்தாலும்
தேனான தென்பொதிகை தன்னில்வாழும்
தேஜொளிவின் அகத்தியனார் கிருபையாலும்
மானான சீனபதி சமாதிசென்ற
***மகத்தான கமலமுனி கடாட்சங்காணே*** ***(4999)***

***தாமேதான் கமலமுனி சமாதிபக்கல்***
***தன்மையுடன் யான்சென்று சேர்வைசெய்தேன்***
வேடம்தான் சீனபதி கோட்டைக்குள்ளே
வேகமுடன் குளிகைகொண்டு இறங்கினேன்யான்
***(4021)***

## சீனாவில் கமலமுனி சித்தருடன் சந்திப்புகள்

போகர் சித்தர் பலமுறை குளிகையைக் கொண்டு பல

இடங்களுக்குச் சென்று வந்துள்ளார். அதில் குறிப்பாக, இந்தியாவைப் பற்றியும் சீனாவைப் பற்றியும் பலமுறை பல கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். ஒவ்வொரு முறையும் அவர் பல இடங்களுக்குச் சென்று திரும்பும்போது சீன தேசத்தில் கமலமுனி சித்தரைச் சந்தித்ததாகச் சொல்வதைப் பார்க்கும்போது, கமலமுனி சித்தர் அவருக்கு குருவாக இருந்ததைக் காட்டிலும் ஒரு சிறந்த நண்பராக இருந்திருப்பார் என்று எண்ணத் தோன்றுகிறது.

விட்டவுடன் யானும் அல்லோ சீனதேசம் போயிருந்து கமலர் தன்னை காண, வந்தவுடன் கமலமுனி தன்மை கண்டேன், நலமுடனே கமலமுனி பக்கல் சென்றேன், கமலமுனி மகிழ்ந்து விட்டாரே, கமலமுனி சித்தர் தம்மை நலமுடனே சீனம் அதில் பார்த்தேனே, கமலரிடம் வந்தேனப்பா, காணவே சீனபதி சென்றேன் யானும் கமலமுனி சீர் பாதம் கண்டு போற்றி, கமலமுனி கண்டேன் தாமே என்ற சொற்றொடர்கள் அதை நமக்கு விளக்குகின்றன.

விட்டவுடன் யானுமல்லோ ***சீனதேசம்***
***போயிருந்து கமலர்தன்னை காணவென்று***
சட்டமுடன் சமாதியிலே இருந்தாரங்கே
சார்புடனே அவர்பாதம் தொழுதிட்டேதான்
இட்டமுடன் யானுமல்லோ சீனதேசம்
இன்பமுடன் காணவென்று குளிகைபூண்டு
சட்டமுடன் யான்வந்தேன் என்றுசொல்லிக்
கமலமுனி தன்பாதம் தொழுதிட்டேனே **(1479)**

***வந்தவுடன் கமலமுனி தன்னைக்கண்டேன்***
வாகுடனே கண்ணபிரான் வளமைசொன்னேன் **(1732)**

தொடர்ந்துமே சீனபதிக்கு யேகியானும்
துப்புரவாய்க் ***கமலமுனி பக்கல்சென்றேன்***

*நடந்ததொரு சங்கிரகம் யானுரைத்தேன்*
நலமுடனே *கமலமுனி மகிழ்ந்திட்டாரே* **(1777)**

பன்றான சீனபதி தலைமையென்று பாங்குடனே
குளிகைபூண்டு பறந்திட்டேன்யான்
*நன்றான கமலமுனி சித்தர்தம்மை*
*நலமுடனே சீனமதில் பார்த்திட்டேனே* **(1783)**

பாரேதான் சீனபதி தன்னில்வந்து
*பட்சமுடன் கமலரிடம் வந்தேனப்பா* **(2022)**

போனபின்பு காலாங்கி குருவாஞ்சாமி
பொன்னகரம் போயிருந்து பட்டமாச்சு
தானான *கருவூரார் கமலர்தாமும்*
*தயவுடனே சீனபதி போயிருந்து*
வானான காலாங்கி சீஷனென்னை
வரவழைக்க நியாபகத்தில் நினைத்தபோது
பானமுடன் அடியேனும் குளிகைபூண்டு
*பறந்திட்டேன் சீனபதி தேசந்தானே* **(2057)**

காணவே சீனபதி சென்றேன்யானும்
கமலமுனி சீர்பாதங் கண்டுபோற்றி
வேணவுப சாரமது மிகவுஞ்செய்து வெற்றியுடன்
குளிகையது பூண்டுகொண்டு
பாணமது போலெழும்பி யடியேன்தானும்
பக்கலென்ற சமாதியது நின்றேன்யானும்
நாணவே தலைகுனிந்து நின்றபோது
*நாதராங் கமலமுனி விடைசொன்னாரே* **(3297)**

சென்றேனே குளிகையது மிகவும்பூண்டு
சீனபதிக்குள்ளாக வந்தேன் யானும்
நின்றேனே எனதையர் காலாங்கிநாதர்
நிலையான சமாதியிடஞ் சேர்வைசெய்தேன்

குன்றான மலைதனிலே ஏறியல்லோ
*கொப்பெனவே கமலமுனி கண்டேன்தாமே* (4020)

## போகர் சித்தர் சொல்லும் கமலமுனி சித்தர் கொடுத்த நூல்கள்

கமலமுனி சித்தர் எழுதிய நூல்களைப் பற்றிச் சொல்லும் போது அவர் பல கருத்துக்களைக் கோடிமுறை சொன்னதாக குறிப்பிடுகின்றார். அத்தகைய நூல்கள் நமக்கு கிடைக்கப் பெறவில்லை. ஆனாலும், கமலமுனி சித்தரும் பல நூல்களை எழுதியுள்ளார் என்பதை நாம் இந்தப் பாடல்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

தானான முனிவர்களும் சித்தர்தாமும்
தயவாகப் பாடிவைத்தார் வெகுநூலப்பா
***கோனான கமலமுனி ரிஷிகள்தானும்***
***கொட்டினார் கோடிமுறை என்னைப்போல***
*தே*னான சாத்திரத்தில் என்னைப்போல
தெளிவாகச் சொல்லவில்லை யாருமப்பா
வானான எந்நூலில் ஒன்றும்பொய்யா
வளமையுடன் போகரிஷி வன்மைபாரே ***(2150)***

சீனமென்றால் தேசமது புதுமைமெத்த
சிறப்பான நூல்களெல்லாம் அங்கேயுண்டு
வானமுடன் தானிருக்கும் அதிசயங்கள்
வாகான பூலோக மர்மமெல்லாம்
***ஞானமுடன் பாடிவைத்தார் கமலர்தாமும்***
***மானிலத்தில் பாடிவைத்தோர் கோடாகோடி***
தானமது இருக்குமிடம் யாமும்கண்டோம்
தராதலத்தில் எமைப்போலே காண்பாருண்டோ
***(2152)***

## போகர் சித்தருக்கு கமலமுனி சித்தர் செய்த உபதேசங்கள்

போகர் சித்தருக்கு கமலமுனி சித்தர் சில உபதேசங்களைச் செய்துள்ளார். அப்படிச் செய்யும்போது அதிலே ஒரு மருத்துவக் குறிப்பையும் ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார். இதிகாச வித்தையெல்லாம் கற்றுத் தந்ததாகவும் ஓரிடத்தில் கூறுகின்றார். கமலமுனி சித்தர் பல விஷயங்களைச் சொன்னதைக் கேட்டு நானும் பல சாத்திரங்களைக் கண்டு கொண்டேன் என்று போகர் சித்தர் கூறுவதிலிருந்து கமலமுனி சித்தர் பல காரியங்களைச் செய்து இருப்பதை நாம் அறிகிறோம்.

வைப்பான மின்னமொரு மார்க்கங்கேளு
    ***மகத்தான கமலமுனி சொன்னமார்க்கம்***
வைப்பான காசியென்ற கட்டிதானும்
    வாகான கருவாயின் பட்டைதானும்
வைப்பான கெவுரியுட சார்தான்கூட்டி
    வளமான ஒட்டகத்தின் உதிரந்தானும்
வைப்பான சரக்குடனே உதிரவேங்கை
    வளமுடனே தான்சேர்த்து அரைத்திடாயே ***(1553)***

அன்புற்றார் ***கமலமுனி சேதிகேட்டு***
    ***அப்பனே போகரிஷி சொல்லக்கேளும்***
***வன்புற்ற இதிகாச வித்தையெல்லாம்***
    ***வளமுடனே காட்டிவிட்டால் பூலோகத்தில்***
இன்புற்று யாரொருவர் மதிக்கப்போறார்
    ஏகவெளி ஆகிவிடும் மன்னாகேளு
துன்புற்று எந்தனையும் சபிப்பாரப்பா
    சூட்சாதி சூட்சமதை வெளிக்காட்டாதே ***(1809)***

சித்தான புண்ணாக்கர் அனேகஞ்சொன்னார்
    ***சிறப்பான கமலமுனி அனேகஞ்சொன்னார்***

முத்தான புலத்தியரும் அனேகஞ்சொன்னார்
முனையான சிவவாக்கியர் அனேகஞ்சொன்னார்
சுத்தான சுந்தரனார் அனேகஞ்சொன்னார்
சுருதிமுதல் பெருநூலாம் கண்டேன்யானும்
நித்தான ரோமமுனி அனேகஞ்சொன்னார்
நீடூழி சாத்திரங்கள் கண்டிட்டேனே *(1993)*

## கமலமுனி சித்தரின் சமாதி

கமலமுனி சித்தரைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் பல இடங்களில் அவரின் சமாதியைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இருந்துவிட்டார், சமாதியில் இறங்கிவிட்டார், சமாதி பூண்டார், சமாதியில் மறைந்தார் என்ற சொற்கள் மூலம் நாம் அதை அறிகிறோம்.

***கமர்ந்திடவே கமலமுனி சித்துதாமும்***
***கருவாக சுனையோர மிருந்திட்டாரே*** ***(3786)***

***தூண்டியே சீஷர்களை தாமழைத்து***
***துப்புறவாய் கூறலுற்றார் கமலர்தாமும்***
***மாண்டுமே சீனபதிதன்னிலப்பா மகத்தான***
***சமாதிதனி லிறங்கிட்டேனே*** ***(3794)***

***காணலா மென்றதுமே கமலர்தாமுங்***
***காசினியில் தாமுரைத்து சமாதிபூண்டார்***
......................
***பூணவே மிகவறிந்து சீஷருக்கு***
***புத்திமதி சொல்லியல்லோ மறைந்திட்டாரே*** ***(3826)***

## கமலமுனி சித்தரின் சமாதி அருகே காத்திருத்தல்

சமாதியடைந்த கமலமுனி சித்தரைக் காத்திருந்து காண முயன்றதாகவும் சில பாடல்கள் உள்ளன. காத்திருந்தேன் வெகு கோடி காலமப்பா என்ற பாடல் வரி மூலம் அதைத்

தெரிவிக்கின்றார். கமலமுனி சித்தரின் சமாதி முன் பல மாந்தர்களும் பூசைகள் செய்ததை அருகிருந்து பார்த்ததை போகர் சித்தர் கூறியுள்ளார்.

தாக்கான சீனபதி தன்னில்யானும்
காலான கமலமுனி சமாதிபக்கல்
*காத்திருந்தேன் வெகுகோடி காலமப்பா (2985)*

*காதமெனும் சீனபதி மூன்றுகாதம்*
*கமலமுனி தன்னையவர் மாந்தரெல்லாம்*
*வேதமுடன் சிவபூசை மார்க்கத்தோடு*
*வேள்விகளும் அனேகமதாய் நடத்துவாரே (2994)*

## கமலமுனி சித்தரின் மறைவு

கமலமுனி சித்தர் இவ்வுலகில் இருந்து மறைந்தார் என்று கூறும் ஒரு பாடலும் உண்டு. திறம் உடனே சமாதிதன்னில் இறங்கியதால் தீரமுடன் பூமியில் ஐக்கியமானார் என்ற பாடல் வரி மூலம் அவர் மறைந்தார் என்று தெரிகிறது.

*மறைத்தாரே சீனபதிக்கடலோரந்தான்*
*மகத்தான கமலமுனி நாதர்தாமும்*
இருந்தாரே புஜண்டருட சமாதிபக்கல்
எழிலான கடலோரந்தன்னிலப்பா
துறந்துமே சீஷவர்க்கந் தனைப்பிரிந்து
*தொல்லுலகில் சமுசார வாழ்க்கையற்று*
திறமுடனே சமாதிதனி லிறங்கியேதான்
*தீரமுடன் பூமியில் ஐக்கியமானாரே (3827)*

## கமலமுனி சித்தர் போகர் சித்தரின் சாபத்தை தீர்த்தல்

போகர் சித்தருக்கு இருந்தச் சாபத்தை கமலமுனி சித்தர் தீர்த்ததாகவும் ஒரு பாடல் வரி மூலம் தெரியவருகிறது. கொடும் என்று கேட்கையிலே சித்து தாமும் கொப்பெனவே எந்தனுக்குச் சாபந்தீர்ந்து என்ற வரி மூலம் அதை அறிகிறோம்.

*விடையொன்று சொல்லுகையில் அடியேன்தானும்*
*விருப்பமுடன் வுத்தாரஞ்சொல்லுற்றேன்*
*தடையில்லா வாக்கதுவுங் கமலர்தாமும்*
*தாட்சியுடன் எந்தனுக்கு உரைத்ததாலே*
*மடைபோன்ற செந்தூர காயகற்பம்*
*மகதேவர் மகிட்சியுடன் செய்யலுற்றார்*
*இடையூறு வாராமல் எந்தனுக்கு*
*எழிலான வாக்கதுவுங் கொடுவென்றேனே (3298)*

*கொடுவென்று கேட்கையிலே சித்துதாமும்*
*கொப்பெனவே எந்தனுக்குச் சாபந்தீர்ந்து*
*படுமுன்னே சரக்கெல்லாம் கட்டிப்போக*
*பாரினிலே காயாதிகற்பந்தானும்*
*தொடுகுறி போலெந்தனுக்கு வுளவுஞ்சொல்லி*
*தோஷமது போவதற்கு முறையுஞ்சொல்லி*
*விடுவகலும் பிணிநீங்கக் காயகற்பம்*
*விருப்பமுடன் வாக்களித்தார் முறையுந்தானே (3299)*

*தானான கமலமுனிநாதர்தாமும்*
*தகமையுடன் எந்தனுக்கு வாக்களித்தார்*
*கோனான காலாங்கி நாதர்பாதம்*
*கும்பிட்டு வடியேனுந் தாள்பணிந்து*
*தேனான சாத்திரத்தை கண்டாராய்ந்து*
*திரட்டிவைத்தேன் போகரேழாயிரந்தான்*
*பானான காலாங்கிதனைநினைத்து*
*பாடிவைத்தேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே*
*(3300)*

## கமலமுனி சித்தரின் வயது

கமலமுனி சித்தரின் வயதையும் போகர் சித்தர் தன் பாடல்கள் மூலம் கூறுகின்றார். அவர் 4000 வருடங்கள், 200

ஆண்டுகள், *360* ஆண்டுகள் மற்றும் *12* ஆண்டுகள் வாழ்ந்ததாகப் பல்வேறு பாடல் வரிகளின் மூலம் கூறுகின்றார். இவை எல்லாம் அவர் மனித உருவில் பல நாடுகளில் வாழ்ந்ததைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

பாரேதான் கமலமுனி வயதேதென்றால்
பாலகனே சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
நேரேதான் வயததுவும் ***நாலாயிரந்தான்***
நேர்மையுடன் முந்நூற்றுச் சொச்சமாகும்
சீரேதான் சீனபதி தன்னிலப்பா
சிறப்புடனே நெடுங்கால மிருந்தசித்து
தீரேதான் சமாதிமுகந் தன்னிற்சென்று
தீர்க்கமுடன் ***இருநூறு வாண்டுதானே*** ***(5841)***

ஆச்சப்பா இன்னமொரு மகிமைசொல்வேன்
வப்பனே யதிசயங்கள் மெத்தவுண்டு
மாச்சலுடன் வையகத்தில் இருந்தசித்து
மகத்தான அறிவானந்த சித்துதானும்
***பாச்சலுடன் வயததுவும் ஏதென்றாக்கால்***
***பண்பான முந்நூற்று வறுபதாண்டு***
***மூச்சடங்கி சமாதிதனில் இருந்தசித்து***
***மூர்க்கமுடன் பனிரெண்டு வருஷங்காணே*** ***(5843)***

காணவே ***பனிரண் டாண்டுமட்டும்***
***காசினியில் பூமிதனில் இருந்தசித்து***
தோணவே கௌபாலர் சீஷனாகும்
தொல்லுலகில் இவர்மகிமை மெத்தவுண்டு
பூணவே வையகத்து மாண்பருக்கு
புகழாக முன்னடந்த காரியத்தை
வேணபடி சன்னதங்கள் கொண்டாற்போலே
விட்டகுறை இருந்தபடி சொல்வார்பாரே ***(5844)***

## கமலமுனி சித்தரின் மரபு

கமலமுனி சித்தர் மரபு வழியில் மாந்தர்கள் உள்ளனர் என்பதை ஒரு பாடல் மூலம் அறிகின்றோம். அவர் குரவர் ஜாதி எனவும் அவருடைய தலைமுறைகள் ஆறு எனவும் அந்தப் பாடல் மூலம் அறிகிறோம்.

ஆதியாங் ***கமலமுனி யென்ற சித்து***
***வன்பான குரவரிட ஜாதியாகும்***
நீதியாந் தலைமுறைகள் ஆறெட்டாகும் ***(5725)***

## கமலமுனி சித்தரின் சீனப் பின்னணி

கமலமுனி சித்தரின் சீனப் பின்னணி என்று பார்த்தால், அவர் சீனாவில் வாழ்ந்த காலாங்கி சித்தர் அவர்களின் பேரனாக இருந்ததாக இந்த நூல் மூலம் தெரிய வருகிறது. மேலும், அவர் பல ஆண்டுகள் வாழ்ந்ததைக் குறிப்பிடும் போது, அவர் பல பிறவிகள் எடுத்ததையும் நாம் உணரலாம்.

அப்படி ஒரு பிறவியில் அவர் 16 ஆண்டுகள் வாழ்ந்ததாக கூறப்பட்டுள்ளது. கமலம் என்பது தாமரை. சீனர்களின் சாகாவரம் பெற்ற மாந்தர்கள் என்று கூறப்படும் எட்டுப் பேரில், தாமரைப் பூவையே தன்னுடைய அடையாளமாக வைத்திருக்கும் ஒரு பெண் (ஹ சியன் கு - He Xian Gu), 14-15 ஆண்டுகள் வாழ்ந்து பூவுலகை விட்டு நீங்கினார் என்ற ஒரு குறிப்பு உள்ளது. அதன்படி பார்த்தால், அந்தப் பெண் கமலமுனி சித்தராக இருக்கலாம் என்று நாம் கூறலாம்.

சேரவென்று சொல்லுகையில் புஜண்டர்தாமும்
சிறப்புடனே கமலமுனி கூறலுற்றார்
***தீரமுடன் வுலகுதனில் பதினாறாண்டு***
***திறமுடனே யானிருந்து வருவேனென்று***
கூறவே கமலமுனி சித்துதாமும்
கொப்பெனவே தானுரைக்க சீஷரெல்லாம்

பாரமுடன் சித்தொளிவில் பக்கம்நின்று
பாங்குடனே வெகுகாலம் பணிசெய்தாரே **(3808)**





போகர் சித்தர் தன்னுடைய குருவாகக் குறிப்பிடும் கமல முனி சித்தரைப் பற்றி இந்தப் பகுதி, அவரது பிறப்பு, இறப்பு, அவரது வயது, அவர் செய்த பணிகள், அவர் சீனாவில் வாழ்ந்த காலம் என்பன பற்றி பல பாடல்கள் மூலம் அறிகின்றோம். அத்தகையப் பாடல்களைக் கொண்டு இந்தப் பகுதி எழுதப்பட்டுள்ளது. கமலமுனி சித்தரின் இலக்கியங்களைப் பற்றி மேலும் ஆய்வு செய்தால், இன்னும் அவருடைய சீனப் பின்னணியைப் பற்றி நாம் அறியலாம்.



# சீன நாட்டினற்கு போகர் சித்தர் அறிமுகப்படுத்திய கருவிகள் [கண்டுபிடிப்புகள்]

# (Instruments introduced by Bhogar to Chinese)

**போ**கர் சித்தர் சீனாவில் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் போகர் 7000 என்ற நூலில் கொட்டிக்கிடக்கிறது. அவர் அங்கு வாழ்ந்த போது, அங்குள்ள மக்களுக்கு பலவிதமான கருவிகளையும், செய்வதற்கு முறைகளையும் அறிமுகப்படுத்தியுள்ளார். அதில் அவர் காகிதம், கண்ணாடி, பீங்கான், கப்பல், மரக்கலம், நீராவிக்கப்பல், ஆகாயக் கூண்டு, தொலைநோக்கி, ஆகாயக் குடை, காற்றாடி, நீருக்குள் மூச்சு விடும் கருவி மற்றும் பறக்கும் ஒளிக்கூண்டு போன்ற பொருட்களை செய்யும் முறைகளை அறிமுகப்படுத்தியுள்ளார். அதைப் பற்றிய விளக்கங்களை இந்தப் பகுதி தர உள்ளது.

**உ**லகிலே பல இடங்களில் பல கண்டுபிடிப்புகள் நடந்த வண்ணம் இருக்கின்றன. ஆனால் தொன்மையான காலத்திலே பல புதுப் புதுக் கண்டுபிடிப்புகளை சித்தர்கள் செய்து இருக்கிறார்கள் என்பதை நாம் சித்தர் இலக்கியத்திலிருந்து அறிகிறோம். அதிலும், போகர் சித்தர், கண்டுபிடிப்புகளின் தலைவர் என்றே கூறலாம். பல பொருட்களை அவர் எப்படி செய்யவேண்டும் என்ற முறைகளோடு தன்னுடைய போகர் 7000 என்ற நூலில் விளக்கியுள்ளார். அதிலும் அதைச் சீன மக்களுக்குச் சீனாவில் செய்து காட்டியதாக குறிப்பிடுகின்றார்.

உலகிலேயே முதன்முதலில் வெடிமருந்து, காகிதம் இரண்டையும் கண்டுபிடித்தவர்கள் சீனர்கள் என்று வரலாறு கூறுகிறது. நம் போகர் 7000 அந்த இரண்டு கண்டுபிடிப்பு-களையும் அறிமுகப்படுத்தியவர், போகர் சித்தர் என்று நாம் கூறுவதை எத்தனை பேர் நம்புவார்கள் என்று தெரியவில்லை. இருந்தாலும் போகர் சித்தர் இந்தப் பொருட்களை செய்யும் விதங்களையும் குறிப்பிடுவதை பார்த்தால், அன்றைய காலகட்டத்தில் இவை மிகச் சிறப்பான கண்டுபிடிப்புகள் என்று கூற முடியும்.

போகர் தன்னுடைய நூலான போகர் ஏழாயிரத்தில் பல கருத்துகளை தெரிவித்துள்ளார். அதிலே அறிவியல் கருத்துகள் பல உள்ளன. இந்தப் பகுதியில், போகர் 7000-த்தில் பல்வேறு அறிவியல் கருத்துகள் உள்ள சொற்களைத் தேடி ஆராய்ந்து, அதன் மூலம் பாடல்களைப் பெற்று, அவற்றில் சில தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு சொற்களும் எத்தனை முறை

வருகிறது என்பதையும் பார்த்து, பாடல்கள் பல்வேறு இடங்களில் இருந்தாலும், அவற்றை கண்டுபிடித்து, இங்கே தரப்பட்டுள்ளது.

## அறிமுகப்படுத்திய கருவிகள்

போகர் சித்தர் தான் எழுதிய போகர் 7000-த்தில் கருவி கரணாதி பொருளாதியந்தம் கண்டு அனைத்தையும் பாடி வைத்துள்ளதாகக் கூறுகிறார்.

காணவே சத்தகாண்ட மேழிற்குள்ளே
*கருவிகர ணாதிபொரு ளாதியந்தம்*
*தோணவே துறைமுகமும் யானுங்கண்டு*
*துப்புரவாய்ப் பாடிவைத்தேன் குருநூல்தானும்*
வேணதொரு பொருளெல்லாம் இதிலடக்கம்
விரும்பியே *யானுரைத்த பெருநூல்தானும்* **(5000)**

இந்தப் பகுதியில் போகர் சித்தர் காகிதம், கண்ணாடி, பீங்கான், கப்பல், மரக்கலம், நீராவிக்கப்பல், ஆகாயக் கூண்டு, தொலைநோக்கி, ஆகாயக் குடை, காற்றாடி, நீருக்குள் மூச்சு விடும் கருவி மற்றும் பறக்கும் ஒளிக்கூண்டு பற்றி கூறியுள்ளப் பாடல்கள் பல்வேறு தலைப்புகள் கீழ் தரப்பட்டுள்ளன.

## காகிதம்

சீனாவில் காகிதம் எப்படி செய்யப்பட்டது என்பதை பல பாடல்கள் மூலம் அவர் தெரிவிக்கின்றார். காகிதம் செய்வதோடு அல்லாமல் அதை எப்படிச் செய்வது, அதை ஆலையில் எப்படி செய்வது என்பதைப் பற்றிய பாடல்கள் மிகவும் சிறப்புடன் தரப்பட்டுள்ளன. காகிதத்தில் எப்படி வர்ண கலவையும் சேர்த்து வர்ண காகிதங்கள் செய்யப்படுகின்றன என்பதையும் குறிப்பிடு-கின்றார்.

*2485 முதல் 2505 வரை உள்ள பாடல்கள் அதைக் கூறுகின்றன.*



உளவான சீனபதி வேதைமார்க்கம்
உத்தமனே வேடிக்கை இன்னஞ்சொல்வோம்
***தலமான காயிதம் சன்னமட்டும்***
***தான்செய்யும் விபரங்கள் சாற்றக்கேளு*** ***(2485)***

எடுக்கலாம் ஆலைவிட்டு எடுத்தபோது
எழிலான காற்றதனில் காயப்போடு
தொடுக்கவே ரவியென்ற ஒளிதான்பட்டால்
தோற்றமுடன் காயிதமும் வெளுப்புமெத்த
படுக்கமுடன் இப்படியே ***ஆலைதன்னால்***
***பலபலவாம் காயிதங்கள் எடுக்கலாகும்***
கொடுக்கவே ஆலைகளும் அனேகமுண்டு
கொப்பனவே அதன்கூறு சொல்லொண்ணாதே ***(2498)***

சொல்லவே கஞ்சிதனை மேலேபூசி
சுத்தமுடன் காயிதங்கள் எடுக்கலாகும்
வெல்லவே கஞ்சியினால் ஆலைதன்னில்
மெருகுடனே சக்கரமாம் உருளையுண்டு

புள்ளவே உருளைக்கு பஞ்சுபூட்டி
பொங்கமுடன் தோலாலே ஆலையாகும்
*பங்கமில்லா காயிதத்தை ஆலைக்கிய*
*பாகமுடன் பெருகுடனே தள்ளும்பாரே* *(2499)*

தள்ளயிலே சக்கரமும் ஓடித்தானும்
சாங்கமுடன் தானெடுத்து அடுக்கும்பாரு
துள்ளியே படல்தானும் மேலேயேற்றி
துப்புரவாய் அடிவாரத் தொட்டிக்குள்ளே
*மெள்ளவே கொண்டுசென்று அடுக்கிப்பின்பு*
மேற்புரத்தில் சட்டமென்ற ஆலையப்பா
கொள்ளவே சக்கரமாம் ஆலைநின்றால்
கொடிதான ஆலைக்கு ஊறுண்டாமே *(2500)*

கேளேதான் காகிதம் படிந்தபின்பு
கெடியான அன்னமென்ற பேதிதன்னை
தாளவே திராதகமாய் எடுத்துக்கொண்டு
தகைமையுடன் சவுரியின்றன் மயிரினாலே
*மீளவே கத்தையாய்க் கட்டிக்கொண்டு*
*விருப்பமுடன் தான்தெளிக்க வர்ணம்பாயும்*
சாளவே கடிதமெல்லாம் வர்ணபேதம்
சார்பாகக் காட்டியல்லோ பரவுந்தானே *(2505)*

## கண்ணாடி

போகர் சித்தர் கண்ணாடி காய்ச்ச சீனாவைத் தேர்வு செய்ததைப் பற்றி கூறிவிட்டு, அந்தக் கண்ணாடியை எப்படி காய்ச்சலாம் என்பதையும் கூறுகின்றார். அதில் இரண்டு பாடல்கள் மட்டும் இங்கே தரப்பட்டுள்ளன.

***2363 முதல் 2384 வரை உள்ள பாடல்கள் அதை கூறுகின்றன.***



முனியான காலாங்கி தாள்பணிந்து
　　முயற்சியுடன் அடியேனும் குளிகைபூண்டு
தனியாக யானுமல்லோ சீனஞ்சென்றேன்
　　தகமையுடன் பூநீரைக் கண்டறிந்தேன்
பனியான தேசமது சீனமார்க்கம்
　　பான்மையுடன் எத்தொழிலும் செய்வதற்கு
தொனியான தேசமென்று நிட்சயித்து
　　தொடங்கினேன் கண்ணாடி காய்ச்சவென்றே ***(2378)***

பான்மையாம் உபசாரம் ***பெற்றுயானும்***
　　பலபலவாம் ஆச்சரிய வித்தையெல்லாம்
மேன்மையுடன் சீனபதி உலகத்தோர்க்கு
　　மகிழ்ச்சியுடன் செய்துவைத்தேன் கோடிவித்தை
மாண்மையுடன் பூநீரை காண்பார்சித்தர்
　　மார்க்கமுடன் துறைவழியும் காணார்தாமும்
***காண்மையுடன் காலாங்கி கடாட்சத்தாலே***
　　***கண்டறிந்தேன் கண்ணாடி காய்ச்சத்தானே*** ***(2384)***

## ***பீங்கான்***

சீனா உலகத்திலேயே அதிகமான வர்த்தகம் செய்யும் ஒரு பொருள் பீங்கான். இந்தப் பீங்கானை எப்படி செய்வது என்பதையும் சீனர்களுக்குக் கூறியதாக போகர் சித்தர் தெரிவிக்கின்றார்.



ஆமேதான் இந்தவண்ணம் ஆலைக்குள்ளே
அப்பனே பிரிவினைகள் ஆகும்பாரு
***நாமேதான் சொன்னபடி பீங்கான்மார்க்கம்***
***நாட்டிலே செய்வார்கள் கோடிபாதை***
வேமேதான் செய்தாலும் நாட்டுவேதை
வேகவைத்தால் மண்ணதுவும் வெடியுண்டாகும்
கோமானாம் சாலியன்றன் வேதையென்பார்
கொற்றவனே சீனபதிக்கு ஒப்பதாமே ***(2373)***

வர்ணமுடன் கண்ணாடி அனந்தமார்க்கம்
வாகுடனே செய்யலாம் கோடிவித்தை
வர்ணமுள்ள பாத்திரங்கள் இதனாலாகும்
வளமான புட்டிமுதல் குப்பிமார்க்கம்
வர்ணமுள்ள விளக்கொளிவு இதனாலாகும்
***வாகான பீங்கான்கள் இதனாலாகும்***
வர்ணமுள்ள மணிவகைகள் இதனாலாகும்
மார்க்கமுள்ள திவாபரணம் இதனால்தாமே ***(2365)***

## கப்பல், மரக்கலம், நீராவிக்கப்பல்

கப்பல், அதிலும் நீராவிக்கப்பல் அதை எப்படி செய்ய வேண்டும் என்று ஒரு ஐம்பது பாடல்களிலே அவர் முழு வர்ணனைகளோடு கூறுவது மிகவும் வியக்கத்தக்கது.

*2363* முதல் *2384* வரை உள்ள பாடல்கள் அதைக் கூறுகின்றன.

***செய்யவே மராமரக் கப்பல்தானும்***
***சிறப்பாக ஆயிரம் கூட்டத்தோடும்***
பையவே சூத்திரமாம் மரக்கலந்தான்
பாருலகில் சீனபதி யார்கள்மெச்ச
மெய்யவே நீளமது கெஜமெண்ணூறு
மெதிரான அகலமது கெஜமேநூறு
பெய்யவே சதுரமது தீர்மானித்து
***பிசகின்றி முடித்தவகை கூறுவேனே*** **(1927)**

ஆக்கமுடன் கப்பலொன்று நிர்மித்தேதான்
***அதின்மேலே வெகுஜனங்கள் ஏத்திவிட்டேன்***
மார்க்கமுடன் சித்தர்முனி ரிஷிகள்தம்மை
பாங்குபெற மேலவரை ஏற்றிவிட்டேன்
நோக்கமுடன் மேல்வரையில் நானிருந்தேன்
நோட்டமுடன் சுக்கானை முடுக்கிவிட்டு





சோக்கமுடன் கடலேழும் சுத்திவந்து
சூட்சமுடன் கப்பலதை நிறுத்தினேனே (1944)

***நிறுத்தினேன் சீனபதிக் கடலோரந்தான்***
நேர்புடனே சித்தர்முனி ரிஷிகள்தாமும்
திருத்தமுடன் தானிரங்கி ஆசீர்மத்தில்
சிறப்பாக சென்றுவிட்டார் ஜனங்களெல்லாம் (1945)

கப்பலிலே செல்லும்போது கடலுக்கு அடியில் இருக்கும் மலைகளைப் பார்க்க முடியாது. அப்படி அந்த மலைகளைக் கண்டுபிடித்து, கப்பல் உடைந்து போகாமல் தவிர்க்க, கப்பலில் கண்ணாடியை வைத்திருப்பதை பற்றியும் ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.

ஆச்சப்பா தீவுவழி செல்லும்போது
வப்பனே கடல்தனிலே அடக்கமுண்டு
நீச்சுடைய கடல்தனிலேபோகும்போது
நீடான மலைப்பாறைக்குண்ணுமுண்டு
வீச்சுடனே நீராவி மரக்கலந்தான்
வீறுடனே யாழிதனில் செல்லும்போது
***மாச்சலென்ற மலைவளத்தா ரிடருண்டாகும்***
***மகத்தான மரக்கலமும் உடைந்துபோமே*** (4117)

போமேதான் நீராவிக்கப்பல்தானும்
பொங்கமுடன் கடல்தனிலே செல்லும்போது
நாமேதான் கண்ணாடிக்கைபிடித்து
நலமுடனே யாழிதம் பார்க்கும்போது
வேமேதான் கண்ணாடிக்கைபிடித்து
விருப்பமுடன் கப்பல்முனைத்தனிலிருந்து
தாமேதான் கண்ணாதன்னையப்பா
***தாரிணியில் ஆழிதனைக் காணுவாயே*** (4118)

காணுகையில் உந்தனுக்குப் புத்திமானே
கடலிலுள்ள மர்மமெல்லாம் கண்ணிற்றோற்றும்
தோணுமே மலைப்பாறைக் கல்களெல்லாம்
தோற்றுமே யுந்தன்கண்ணாடியாலே
பூணவே வழிதடத்தைக் கண்டுமல்லோ
***புகழான மலைப்பாறையொதுங்கியேதான்***
***நீணவே நெடுந்தூரஞ் செல்லலாகும்***
***நீராவிக் கண்ணாடிக் கப்பல்தானே*** ***(4119)***

## ஆகாய கூண்டு

கப்பல்கள் கடலில் சென்று பல பொருட்களையும் தேடி எடுத்து வர பயன்படுத்தப்பட்டன. அப்படி கப்பல்கள் செல்ல முடியாத இடங்களுக்கு ஆகாய கூண்டிலே செல்லலாம் என்று ஒரு பாடல் குறிப்பில் போகர் சித்தர் கூறுகின்றார். விமானங்களைப் போன்று அந்தக் காலங்களிலேயே ஆகாயத்தில் பறக்கும் கூண்டு இருந்தது என்பதை நாம் இதன்வழி அறியலாம்.



மடியுமே கடலுக்கு மேற்பாகத்தில்
வளமுடனே ஆகாயம்பறக்கும்பட்சி
துடியுமே தான்பறந்து சுழலுமாழி
துப்புறவாய் சலமதிலே விழுகும்பாரு
***அடியில் கற்பாறைதனிமெத்தவுண்டு***
***அலைகடலில் தடமதுவுங் காணப்போமோ***
***நொடியான வாகாயக்கூண்டுதன்னில்***
***நோக்கமுடன் தீவுக்குசெல்லலாமே*** ***(4143)***

## தொலைநோக்கி

நாம் தூரத்தில் இருப்பதைப் பார்ப்பதற்கு தொலைநோக்கியை பயன்படுத்துகின்றோம். அத்தகைய தொலைநோக்கியை அவர் குழாய் என்று சொற்கள் மூலம் பயன்படுத்தி அதையும் ஒரு பாடலில் அறிமுகப்படுத்துகிறார்.



வைக்கவே மாளிகையில் மேற்புரத்தில்
வகையுடனே ஆகாயம் காண்பதற்கு
கைக்கனத்தக் குழாயொன்று துத்தநாகம்
***கடுந்தூரம் பார்வையது தெரியவேதான்***
***மெய்க்கவே குழாவினுட சந்தினாலே***
***மேல்நோக்கி ஆகாயம் தன்னைப்பாரு***
பொய்க்கவே கண்ணிமைகள் சிமிட்டாமற்றான்
பொங்கமுடன் தானிருந்து சிரசைப்பாரே **(1275)**

## ஆகாய குடை

வானத்திலிருந்து, மலையிலிருந்து பறந்து பூமிக்கு வருவதற்கு இன்று ஆகாய குடையை பயன்படுத்துகின்றோம். அத்தகைய குடையை அவர் எப்படி பயன்படுத்தலாம் என்பதை அழகாக பாடல்கள் மூலம் விளக்குகின்றார். முதலில் மரத்தில் இருந்து குதித்து பழகி விட்டு, பிறகு மலை மேல் சென்று குதித்து பாருங்கள் என்று கூறுவது எப்படி பயிற்சி பெற்று

அதை செய்யவேண்டும் என்பதையும் விளக்குகிறார். இதையெல்லாம் சீனபதிக்குச்சென்று கூறி புகழ்பெற்றேன் என்று போகர் சித்தர் கூறுகிறார்.



*1281* முதல் *1287* வரை உள்ள பாடல்கள் அதை கூறுகின்றன.

பார்க்கவே ***ஆகாயம் பாவந்தன்னில்***
***பரிவுடனே குதிப்பதற்கு கூண்டுசொல்வேன்***
***கார்க்கவே வட்டமாம் குடைதானொன்று***
பாங்கான குடைநிகளம் அகலங்கேளிர்
ஏர்க்கவே ஆறடியாம் வட்டவீடு
யெழிலான பட்டுவடம் தன்னால்செய்து
தீர்க்கவே பிரம்பதுவும் முப்பத்திரண்டு
திறமான சக்கரமும் ஒன்றேமாட்டே ***(1281)***

குணமுண்டாம் மனமுண்டாம் குவலயத்தில்
கோடிபேர் உனைவந்து மனங்களிப்பார்
பணமென்ன கோடிதனம் படைத்தாலென்ன
பாருலகில் இவ்வித்தைப் பகரப்போமோ
***சீனமதிலே யானுமிந்த வித்தைதன்னைச்***
***சீனபதி சென்றுசெய்து கீர்த்திபெற்றேன்***
வனமுடனே மானிடர்கள் பிழைக்கவென்று
வாகுடனே பாடிவைத்தேன் வளமைபாரே ***(1287)***

## காற்றாடி

நாம் இன்று ஆகாயத்திலே காற்றாடிகளைப் பார்க்கின்றோம். ஆனால் போகர் சித்தர் கூறும் காற்றாடியை இன்னும் பல வித்தைகளைச் செய்ய வல்லது. அதைப் பற்றியும் சில பாடல்களில் அவர் குறிப்பிடுகின்றார். அவர் 16,000 பேரை குடை அடியில் ஏற்றிக்கொண்டு நாடுகளைச் சுற்றி வந்ததாகக் கூறுகின்றார். இது இன்றைய காற்று ஊதற்பை (ஏர் பலூனை) போன்று உள்ளது எனலாம்.

1800 முதல் 1809 வரை உள்ள பாடல்கள் அதை கூறுகின்றன.

கண்டபடி கருத்துடைய சித்தர்தாமும்
காசினியில் செய்தவரும் கண்டோரில்லை
கண்டபடி காத்தாடி சூட்சாசூட்சம்
கயிர்நிற்கும் வழியறியார் துறையுங்காணார்
கண்டபடி கருவூரார் செய்துபார்த்தார்
கருத்திலே அவர்தனக்கு தோன்றவில்லை
**கண்டபடி எந்தனுட புத்தியாலே**
**காத்தாடி யான்முடித்தேன் அவனியோர்க்கே** (1806)

முடித்தேனே சீனமென்ற பதியில்தானும்
முனையான காத்தாடி அடிவாரத்தில்
படித்தளமாம் தோணியது மிகபோல்கட்டி
பாங்கான மாளிகைபோல் தானமைத்து
குடித்தனமாம் **ஜனங்கள் பதினாயிரம்பேர்**
**குடையடியில் தானேத்திக் கொண்டுசென்று**
நடித்துடனே தேவாதி தேவர்தானும்
நாணமுற்று பார்த்திடவே நடத்தினேனே (1807)

நடத்தினேன் சீனபதி ஜனங்களெல்லாம்
நலமுடனே காத்தாடி தன்னிற்கொண்டு
திடத்துடனே சீனபதி மூன்றுகாதம்

திறமையுடன் சுத்திவந்தேன் சித்தர்மெச்ச
வடத்திடமாய் சூத்திரக் கயிர்திரட்டி
***வாகுடனே சீனபதி இறக்கிவிட்டேன்***
தடத்துடனே சீனபதி ஜனங்களெல்லாம்
சந்தோஷித்து என்பேரில் அன்புற்றாரே *(1808)*

## நீருக்குள் மூச்சு விடும் கருவி

போகர் சித்தர் நீருக்குள் சென்று கடலைப் பார்க்கும் கருவியைப் பற்றியும் மிக அழகாகக் குறிப்பிடுகிறார்.



இட்டேனே இன்னமொரு மார்க்கம்பாரு
எழிலான கெந்தருவ வித்தையப்பா
சட்டையொன்று இரும்பாலே செய்துகொண்டு
சாங்கமுடன் தலைதனிலே குழையமைத்து
சட்டமுடன் சங்கிலியால் கயிருண்டு
கருத்துடனே மார்பதனில் தானணிந்து
திட்டமுடன் கழுத்துமிக மூடல்செய்து
தெளிவுடனே நாசிவழிக் குழைசெய்வாயே *(2396)*

குழைதனிலே வடகலை தென்கலைமாற்றி
குறிப்புடனே நாசிவழிக் காற்றுசெல்ல
இழையுடனே திரிபோல இரண்டாக்கி
எழிலான கயிறுக்குள் துவாரமிட்டு

பிழையென்றும் நேராமல் கழுத்தைச்சுற்றி
பிடரியிலே முடிச்சியுடன் பின்னல்செய்து
நுழையாமல் சமமதுவும் திருவல்பூண்டு
நுணுக்கமுடன் தேகமதில் பூண்டுகொள்ளே *(2397)*

துரிதமுடன் கடலுள்ளே சென்றுநீயும்
துலையாத பொருள்களெல்லாம் காணலாகும்
பருவமுடன் இதிகாச வித்தையப்பா
பாகமுடன் போகரிஷி பாவித்தேனே *(2399)*

## பறக்கும் ஒளிக்கூண்டு

சீனாவிலே விழாக்களின் போது, ஒளிக்கூண்டை பறக்க விட்டு மகிழ்வார்கள். அதைப் பற்றியும் போகர் சித்தர் திறம்பட எடுத்துக் கூறுகிறார்.

தானான வித்தையிது சொல்வேன்கேளும்
தகைமையுள்ள இரும்பினிலே காந்தஞ்சேர்த்து
பானாகத் தானுருக்கிக் கம்பியாக்கி
பாலகனே சிறுகம்பி நூல்போலாக்கி
வேனாக கூண்டுதான் அடிதான்பத்து
விருப்பமுடன் நீளமது அடிதான்பத்து
மானாக நாற்சதுரம் ஆக்கியல்லோ
மார்க்கமுடன் கம்பியால் கூண்டுகட்டே *(2391)*

கட்டயிலே சுற்றிலும் தூணிருத்திக்
கருத்துடனே நடுக்கம்பி சதுரமிட்டு
தொட்டில்போல் தான்சமைத்து சுடர்கள்வைக்க
சூட்சமுடன் கம்பிக்கு உள்ளேமாட்டி
சட்டமுடன் சுற்றிலும் நாற்பட்டாலே
சாங்கமுடன் தானமைத்து கிளிபோல்கட்டி
திட்டமுடன் அடிவாசல் தாள்திறந்து
தீர்க்கமுடன் மேல்வாசல் மூடிப்போடே *(2392)*



போட்டவுடன் கற்பூரத் தயிலத்தூட்டி
பொங்கமுடன் விளக்கொளிதான் வைத்துபாலா
நாட்டமுடன் கும்மட்டம்போல் ஜோடித்து
நயமுடனே காற்றடங்கச் செய்துபின்னும்
மூட்டமுடன் வாயுவது உள்ளேதங்கி
முயற்சியுடன் மேலெழும்பிப் போகும்பாரு
வாட்டமுடன் கூட்டமதுதான் ஆகாஷத்தில்
வளமையுடன் போவதற்குத் திறமுண்டாச்சே *(2393)*

போகர் சித்தர் சீனாவிற்குச் சென்று பல கண்டுபிடிப்புகளை அறிமுகப்படுத்தியுள்ளார். அவர் அதை ஏன் தமிழகத்தில் அறிமுகப்படுத்தவில்லை என்பது ஒரு கேள்வியாகவே வைக்கலாம். ஆயினும் அவர் அங்கு செய்ததை தன்னுடைய பாடல்களில் அழகாக எடுத்துக் கூறியிருக்கின்றார். அதில் அவர் காகிதம், கண்ணாடி, கப்பல், பீங்கான், கப்பல், மரக்கலம், நீராவிக்கப்பல், ஆகாயக் கூண்டு, தொலைநோக்கி, ஆகாயக் குடை, காற்றாடி, நீருக்குள் மூச்சு விடும் கருவி மற்றும் பறக்கும் ஒளிக்கூண்டு போன்ற பொருட்களை அறிமுகப்படுத்தியதை நாம் அறிகிறோம். இந்தப் பொருட்களை நாம் அவர் கூறும் வழியில் செய்து பார்த்து அது பயன்படுத்த முடியுமா என்று பார்த்தால் போகர் சித்தர் கூறியதைப் பற்றிய ஆய்வுகளை முழுமைப்படுத்தலாம்.



# சீனத்துக்கு போகர் சித்தர் அளித்த சித்த மருத்துவம் (Siddha Medicine given by Bhogar to China)

உலகை அச்சுறுத்தும் கொரோனா அரக்கனை ஒழிக்க சீனர்கள் பயன்படுத்திய ஆயுதம் அவர்களது சீனப் பாரம்பரிய மருத்துவம். கோவிட்-19 -ம் சீனப் பாரம்பரிய மருத்துவமும் பற்றிய ஆய்வுக் கட்டுரையில் Zhenyu Zhao குழுவினர், சீன பாரம்பரிய மருத்துவம், இந்த நோயை குணப்படுத்துவதில் பெரும்பங்கு ஆற்றி இருப்பதாகக் கூறுகின்றனர். சிங்பைய் பைடு (Qingfei Paidu) என்ற கசாயம் அவர்களுக்கு பெரிதும் உதவியதாக குறிப்பிடுகின்றார்கள்.

சீன தேசத்தில் இந்த மருத்துவ முறையில் சிகிச்சை பெற்று, 90 சதவீதம்பேர் குணம் அடைந்துள்ளனர் என்றும் கசாயம் குடித்த பின் நோயுற்றவர்களுக்கு சிகிச்சை செய்தவர்கள், அதிலிருந்து பெரும்பாதிப்பை தவிர்த்து உள்ளார்கள் என்றும் குறிப்பிடுகின்றனர். நோய் வருமுன் காப்பது, நோய் வந்தபின் சிகிச்சை, நோயிலிருந்து விடுபட்டபின் உடல் பலத்திற்கான முறைகள் என்று பலநிலைகளில் சிகிச்சைகள் அளிக்கப்பட்டு வந்ததால்தான், உலகிலேயே அதிக மக்கள் தொகை கொண்ட சீனநாட்டில் கொரோனா பாதிப்புகள் அதிகம் இல்லை என்றும் கூறுகிறார்.

இந்நிலையில், இந்தியாவில் மேற்கத்திய மருந்துகளையும், தடுப்பூசிகளையும் நாம் பயன்படுத்தியபோதும், இந்தியாவில் பல பகுதிகளில் இந்திய பாரம்பரிய மருத்துவத்தையும் பின்பற்றி நோய் பாதிப்பில் இருந்து தப்ப பலர் முயன்று வருகின்றனர்.

இந்திய மருத்துவத்திற்கான அமைப்பான ஆயுஷ், ‘ஆயுஷ் குடிநீர்’ என்ற மூலிகைநீரை மக்களுக்கு விநியோகித்து நோய் பரவலை தடுக்க முயன்று வருகிறது. அதேபோன்று, தமிழக சித்த மருத்துவ கழகத்தின் நில வேம்பு கசாயத்தையும், கபசுர குடிநீரையும் தமிழக அரசு மக்களுக்கு கொண்டு சென்று, நோய் பரவலை தடுக்க முயன்று வருகிறது. சித்த மருத்துவத்திற்கும், ஆயுர்வேத மருத்துவத்திற்கும் சில வித்தியாசங்கள் உண்டு என்பது யாவரும் அறிந்ததே.

பல சித்த மருத்துவர்கள் சேவை மனப்பான்மையுடன், சித்த வைத்திய மருந்துகளை பாதிக்கப்பட்டவர்களுக்கு கொடுத்து, குணப்படுத்தி வருவதை நாம் பார்க்க முடிகிறது. அவர்கள் நம் முன்னோர்களின் வழி வழியாக வந்த மருத்துவத்தை நம்பி, செயலாற்றி, பல உயிர்களை காப்பாற்றியும் பாதுகாத்தும் வருகிறார்கள் என்றே சொல்லவேண்டும்.

தமிழகத்தின் சித்த வைத்தியம் மற்றும் சீனப் பாரம்பரிய மருத்துவம் இரண்டிற்கும் பல ஒற்றுமைகள் உள்ளன என்பது என் ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

சீனர்களுக்கு மருத்துவ முறையை தந்தது நம் சித்தர்களே என்று தெரிய வருகிறது. சீனாவிற்குச் சென்றேன், வாழ்ந்தேன், அவர்களுக்கு பல வித்தைகளை கற்றுக் கொடுத்தேன் என்று தன்னுடைய போகர் 7000 பாடல்களிலே கூறிய போகர் சித்தர், அத்தகைய சித்தர்களில் ஒருவர் என்பதற்கான ஆதாரங்கள் கிடைத்து இருக்கின்றன.

இதற்கான முக்கிய சான்றாக யின் யாங் என்ற குறியீட்டைச் சொல்லலாம். சீனப் பாரம்பரிய மருத்துவம்

பெரும்பாலும் யின் யாங் என்ற கொள்கையின் மூலமாகத்தான் பயன்படுத்தப்படுகிறது. யின் யாங் என்பது இரண்டு எதிர்வினைகளை குறிப்பது. சூரியன்-சந்திரன், ஆண்-பெண், சூடு-குளிர்ச்சி, இருட்டு-வெளிச்சம் என்று பல கூறுகளை இந்தக் குறியீட்டின் மூலம் அறியலாம். நம்முடைய உடலும் அதேபோன்று இருவகையாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. அவற்றின் தன்மையைப் பொறுத்து தான் மருந்துகள் தரப்படுகின்றன.





சீன யின் யாங் குறியீடு தமிழகத்தின் சிவசக்தி குறியீடு

இந்தக் குறியீட்டை போன்ற குறியீட்டை உங்களில் பலரும் நம் கோயில்களில் பார்த்திருக்கலாம். அது எதைக் குறிக்கிறது என்பதையும் அறிந்து இருக்கலாம். இந்தக் குறியீட்டை சிவசக்தி குறியீடு என்று சொல்வார்கள். ஐம்பது கோயில்களுக்கு சென்று, களப்பணி ஆய்வு செய்தபோது, அதில் பெரும்பாலான சிவன் மற்றும் முருகன் கோவில்களில் இந்தக் குறியீடுகள் தூண்களில் செதுக்கி வைக்கப்பட்டிருப்பது தெரிய வந்தது.

சித்த மருத்துவத்தில் சிவசக்தி என்ற கூற்றின் அடிப்படையில் வைத்தியம் செய்யப்படுகிறது என்று திரு நாராயண சுவாமி அவர்கள் தன்னுடைய ஆய்வில் தெரிவித்துள்ளார். அதன்படி பார்த்தால், இந்தச் சிவசக்தி கூறு

இந்தக் குறியீட்டை குறிக்கிறது என்று கொள்ளலாம். இந்தக் குறியீட்டை சித்த மருத்துவத்தில் சிவசக்தி என்று சொல்லலாம்.

நாதமென்றும் விந்துவென்றும் வாசிக்கேபேரு
ரவிமதியும் சிவசத்தி என்றும்பேரு
வாதமென்றும் வசியமென்றும் அதுக்கேபேரு
மனமென்றும் போதமென்றும் இதுக்கேபேரு
நீதமென்றம் பூமியென்றும் இதற்கேபேரு
நிலையான வேகமென்றும் கந்தமென்றும்பேரு
காதமென்றும் தாரமென்றும் இதற்கேபேரு
கண்ணொளியாய் நின்றது இரண்டும்தானே *(215)*

என்று இந்தச் சிவசக்தி பொருண்மையைப் பற்றிக் கூறுகிறார் போகர் சித்தர்.

நம் கோயில்களில் இருக்கும் அந்தக் குறியீடு, எப்படி சீனாவிலும் பயன்படுத்தப்படுகிறது? இது அங்கு யாரேனும் ஒருவரால் அறிமுகப்படுத்தப்பட்டு இருக்கவேண்டும். அது போகர் சித்தராகவும் இருக்கலாம், இல்லை வேறு ஏதேனும் சித்தராக கூட இருக்கலாம்.

இந்தியாவில் இந்தக் குறியீடு அவ்வளவாக பயன்படுத்தப்படவில்லை. ஆனால் இந்தக் குறியீட்டில்தான் நம்முடைய சித்தர்களின் கோட்பாடும் வைத்தியத்தின் முக்கிய கூறும் அமைந்திருக்கிறது என்பதை நாம் தெளியலாம்.

சீனப் பாரம்பரிய மருத்துவத்தின் வேர், இந்திய சித்த மருத்துவத்தின் வேராக கொள்வதற்கு இது ஒரு முக்கிய சான்றாகக் கொள்ளலாம்.

மேலும் சீனப் பாரம்பரிய மருத்துவத்தில், பஞ்சபூதங்கள் என்று இந்தியாவில் கூறுவதைப் போன்ற பஞ்சபூதங்களின் அடிப்படையில் தான் மருந்துகள் தயாரிக்கப்பட்டு நோயாளிகளுக்கு கொடுக்கப்பட்டு வருகின்றன.

சீனாவில் 2000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த வெய் போ-யாங் (Wei Bo-Yang) என்பவர் எழுதிய மூன்று கூறுகள் என்று பொருள்படும் சான்தொங்சி (Cantong Qi) என்ற நூலில் தமிழில் உள்ள சித்த வைத்தியக் குறிப்புகளைப் போன்று பல குறிப்புகள் உள்ளன. சித்த வைத்தியத்தில் பயன்படும் மூலிகைகள், வேர்கள், தனிமங்கள் அதிலும் உள்ளன. மேலும், போகர் சித்தரின் ரசவாத குறிப்புகளும் அங்கு பல நூல்களில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. வெய் போ யாங் சீனாவில் வாழ்ந்தவர் என்றாலும், அவர் போகர் சித்தர் செய்த அனைத்து செயல்களையும் செய்திருக்கிறார் என்பதை வைத்து போகர் சித்தரின் ஒரு பிறப்பு சீனாவில் இவர் மூலம் இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

சிகிச்சை முறைகளிலும் பல ஒற்றுமைகள் உள்ளன. சீன மருத்துவக் குறிப்புகளில் மேலும் ஆய்வுகள் செய்தால் சீன மருத்துவம் முழுக்க முழுக்க சித்த மருத்துவத்தை சார்ந்தது என்பதை உறுதியுடன் நிறுவலாம்.

சீனர்கள் அவர்களது வைத்திய முறையில் வைத்த நம்பிக்கையை போன்று, தமிழக அரசும், சித்த மருத்துவத்தில், மேலும் அதிக நம்பிக்கை வைத்து நம் மக்களை இந்த கொரோனா அரக்கனின் பிடியிலிருந்து காப்பாற்ற வேண்டும்.



# சீனாவில் போ-யாங் என்ற ஊர் பெயர்கள்
# (Chinese cities with the name Bo-yang)

**ந**ம் தமிழர்கள் தொன்மைக் காலங்களிலிருந்தே பல நாடுகளுக்கும் சென்று உள்ளது பல ஆய்வுகளின் மூலம் தெரிய வந்துள்ளது. அப்படி அவர்கள் செல்லும் நாடுகளில் தன்னுடைய பெயரையும், தன்னுடைய கடவுளையும் எடுத்துச் சென்று இருக்கின்றார்கள் என்பதை பல ஆய்வுகள் நிறுவியுள்ளன. மேலும் ஒரு இடத்தில் மிகவும் சிறப்பான செயல்களை செய்தவர்களை நினைவு கூறும் வகையில், அந்த இடத்திற்கு அவரது பெயரை வைப்பது மிகவும் சாதாரணமாக நடப்பது உண்டு. அப்படி போ-யாங் என்பவரும் சீன மக்களுக்கு பல நற்காரியங்களை செய்து இருக்கின்றார் என்பதை நாம் அவர் பெயரில் பல ஊர்கள் இருப்பதில் இருந்தே அறியலாம்.

போகர் 7000-த்தில், போகர் சித்தர், தான் சீன மக்களுக்கு பல வித்தைகளை கற்று கொடுத்ததையும், பல அதிசயங்களை காட்டியதையும், அவர்களது நோய்களுக்கு மருந்துகள் கொடுத்ததையும் பாடி வைத்துள்ளார். ஆகையினால் அவருடைய சீனப் பெயரான போ-யாங் என்பதற்கு மதிப்பு கொடுக்கும் வகையில் தான் சீன மக்கள் அவரின் பெயரை ஊர்களுக்கு வைத்திருக்கிறார்கள் என்று நாம் தெளியலாம்.

ஓரிரு இடங்கள் மட்டுமல்லாமல், பல மாநிலங்களில் இந்தப் பெயரில் ஊர்கள் இருக்கின்றன. அந்த ஊர்கள் இருக்கும் மாநிலம் மற்றும் அதன் அட்சரேகை, தீர்க்க ரேகை உள்ள பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளது. அதே பெயரில், ஒரு சிறு ஆற்றின் பெயரும் உள்ளது. ஆற்றின் அட்சரேகை தீர்க்கரேகையும் கொடுக்கப்பட்டுள்ளது.

| ***State*** | **மாநிலம்** | **அட்சரேகை** | **தீர்க்கரேகை** |
|---|---|---|---|
| *Hainan* | ஹைனான் | *20.0277800* | *110.1762900* |
| *Fujian* | புஜிஅன் | *27.0488800* | *120.2282800* |
| *Gansu* | கான்சு | *34.5052800* | *106.0147200* |
| *Guizhou* | குய்சொவ் | *25.6544000* | *105.3230000* |
| *Hunan* | ஹனான் | *26.2116700* | *109.5205600* |
| *Shanxi* | சான்சி | *36.5666700* | *110.5333300* |
| *Guangdong* | குவாங்டொங் | *22.1094800* | *110.5962100* |

போ-யாங்ஹே (Boyang He) என்ற ஆற்றின் அட்சரேகை *29.2833300*, தீர்க்கரேகை *115.9833300.*

# முடிவுரை

இந்த நூலின் முன்னுரையில் கூறியபடி இந்த நூலை எழுதுவதில் எனக்கு ஒரு தனித்துவமான அனுபவம் ஏற்பட்டது. அதேபோன்று இந்த நூலை படித்த பின் உங்களுக்கும் சில உணர்வுகள் ஏற்பட்டு இருக்கும் என்று நம்புகின்றேன். இதில் நம்புவது நம்பாதது என்பது இல்லாமல், போகர் சித்தர் கூறியிருப்பதற்கு ஏதோ ஒரு காரணம் இருக்கின்றது என்ற எண்ணத்தினால்தான் இந்த ஆய்வை நான் தொடர்ந்து செய்து, அவர் கூறிய பாடல்களை உங்கள் முன் வைத்தேன்.

அவர் கூறிய பல விஷயங்கள், சீனாவில் பல நூல்களில் பதிவிட்டு, இன்று வரையிலும் பாதுகாக்கப்பட்டு இருப்பது வியக்கத்தக்க ஒன்று. நான் அதைச் சீன மொழியில் படிக்கவில்லை என்றாலும், ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட நூல்களை நான் சிறிது சிறிதாக பார்த்து ஒப்புமைப்படுத்தி ஆய்வினை தொடர்ந்து வருகின்றேன்.

போகர் சித்தர் சீனாவில் இருந்ததும், அவர் எப்படி வாழ்ந்தார் என்றும், அவர் இங்கு பெண்களை எப்படி வழிப் படுத்தினார் என்றும், அவருடைய குருவான காலாங்கிநாதர் பற்றி அவர் கூறிய விவரங்களையும், அவருடைய சீடரான புலிப்பாணி சித்தரை பற்றிய கருத்துக்களையும், அவருக்கு நெருங்கிய நண்பராகத் திகழ்ந்த கமலமுனி சித்தரைப் பற்றியும் வரும்

பாடல்களை திரட்டி உங்கள் முன்னால் பகுத்தாய்ந்து அறிவித்துள்ளேன்.

எனக்கு சித்த வைத்திய சூட்சமங்கள் பற்றிய அறிவு மிகக் குறைவே. அதனால் மிக சுருக்கமாக பாரம்பரிய சீன வைத்திய முறை பற்றியும், தமிழகத்தின் பாரம்பரிய வைத்திய முறையான சித்த மருத்துவத்தைப் பற்றியும் ஒப்புமைப்படுத்தி ஒரு சிறு பகுதியாக கொடுத்துள்ளேன்.

“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்” என்ற வள்ளுவரின் வாக்குப்படி, சீன தேசத்தில் போ-யாங் என்ற மனிதர் மக்களுக்கு தேவையான பல உதவிகளை செய்ததன் காரணமாகதான் பல மாகாணங்களில் அவர் பெயர் கொண்ட ஊர்கள் இருக்கின்றன என்று நான் எண்ணுகின்றேன். அதைப் பற்றியும் ஒரு பகுதியிலே கொடுத்துள்ளேன்.

சீனாவிலுள்ள சாகாவரம் பெற்ற மாந்தர்களின் நூல்களாக கூறப்படும் நூல்களையும் நம் தமிழகத்தின் சித்தர் நூல்களையும் ஒப்புமைப்படுத்தி ஆராய்ந்தால், இன்னும் பல்வேறு கருத்துக்கள் நமக்குத் தெரியவரும். சீனாவில் பின்பற்றப்பட்டு வரும் தவோ மதத்தின் குரு நம்முடைய சைவ சமயத்தை போற்றும் சித்தரே என்பதை முழுமையாக நிறுவுவதற்கு அது உதவும்.

இதுவரை சீனாவில் மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள் பெரும்பாலும் மேற்கத்திய அறிஞர்களால் மொழிப்பெயர்க்கப் பட்டவை. இதையே நம் தமிழ் அறிஞர்கள் செய்திருந்தால், அவர்கள் நம்முடைய மதத்தின் சாரமும், தவோ மதத்தின் சாரமும் ஒன்றே என்பதை அறிந்து உலகத்திற்கு வெளியிட்டு இருப்பார்கள். அதை இதுவரை யாரேனும் செய்திருக்கிறார்களா என்பது எனக்கு தெரியவில்லை. இணைய தளத்தில் அதைப் பற்றிய விவரங்கள் இதுவரை எனக்கு கிடைக்கவும் இல்லை.

ஆய்வறிஞர்கள் தொடர்ந்து ஆய்வு செய்து இதை நிறுவ முற்பட்டோமேயானால், தமிழருக்கும் சீனருக்கும் தொன்று தொட்டு தொடர்புகள் இருந்ததை அறிந்துகொண்டு, நட்பு பாராட்டி, இந்த உலகத்திலே அமைதியைக் கொண்டுவர ஒரு சிறு முயற்சியாக அது இருக்கும் என்று நம்புகின்றேன்.

இந்த ஆய்வு நூலை நீங்கள் படித்ததற்கு நன்றி. இதைப் பற்றிய உங்கள் கருத்துக்களை எனக்குத் தெரிவித்தால், என்னுடைய ஆய்விற்கு அது மிகவும் உதவியாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றேன்.

அதற்கான மின் அஞ்சலையும் இங்கு தந்துள்ளேன்.

tamilandchina@gmail.com



# நன்றி

இந்த நூலை எழுத எனக்கு ஆதரவு தந்த அனைத்து நண்பர்களுக்கும் முதற்கண் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

போகர் 7000 என்ற நூலை மின் நூலாக்கி, அது என் கைக்கு வந்ததால் தான் இந்த நூலை என்னால் எழுத முடிந்தது. அதை மின்நூல் ஆக்கிய பொறியாளர் திரு சுகுமாரன் அவர்களுக்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

போகர் சித்தர் 7000 பற்றிய விளக்கங்களை திரு. சந்திரசேகர் என்பவர் தன் நூலிலே வெளியிட்டதை காணொளியாக வெளியிட்டதற்கு என்னுடைய நன்றி. அதைக்கண்டு எனக்கு பல கருத்துக்கள் மேலும் தெளிவானது.

போகர் சித்தரின் சீடரான புலிப்பாணி சித்தரை பற்றி அறிந்துகொள்ள, பழனியில் இருக்கும் புலிப்பாணி சித்தரின் ஆதீனத்தை தொடர்பு கொண்டபோது, மருத்துவர் பன்னீர் செல்வம் அவர்கள் எனக்கு பல விபரங்களை கொடுத்து உதவினார். அவருக்கும் என்னுடைய நன்றி.

என்னுடைய ஆய்வைப் பற்றி உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பேராசிரியர்களான முனைவர் சிதம்பரம் மற்றும் முனைவர் ஜானகி அவர்களிடம் உதவி கேட்டபோது, உடனே

தொடர்பு எண்களை கொடுத்து இந்த ஆய்வில் ஈடுபட்டிருந்தவர்களை அறிமுகப்படுத்தினார்கள்.

அப்படி அறிமுகப்படுத்திய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின், போகர் சித்தர் இருக்கைக்கு தலைவராக இருக்கும் திரு. கண்ணன் அவர்கள் எனக்கு பல விஷயங்களை தெரியப்படுத்தினார். அதேபோன்று சித்தர்களைப் பற்றிய ஆய்வில் உள்ள திரு. முத்தாலங்குறிச்சி காமராசு அவர்கள், தான் செய்யும் பணியை பற்றி கூறியதோடு இல்லாமல், அவருடைய நண்பரான திரு. பாஸ்கர் அவர்களை அறிமுகப்படுத்தி எனக்கு தேவையான நூல்களை கிடைக்கச் செய்தார்.

என் இந்த ஆய்வை புலன குழுவினர் கேட்டு, ஆய்வை பற்றிய கருத்துக்களை கூறியது மிகவும் பயனுள்ளதாக இருந்தன. அத்தனை குழுவிற்கும் குழுவின் உறுப்பினர்களுக்கும் என்னுடைய நன்றி உரித்தாகுக.

என்னை இந்த ஆய்வில் முழுமையாக ஈடுபடுத்த தேவையான உந்துதலை ஒரிசா பாலு ஐயா அவர்களின் காணொளிகளும், கருத்தரங்க பேச்சுகளும் பெரிதும் உதவின. அவருக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றி.

ஆய்வை முடித்ததும் அதை நூலாக வெளியிடுவதற்காக **லியோ நிறுவனத்தை** தொடர்பு கொண்டபோது, திரு. குமரன் அவர்கள், உடனே அதற்கு ஒத்துக்கொண்டு என்னை ஊக்கப்படுத்தினார். அவருக்கும் அவருடைய நிறுவனத்துக்கும் என்னுடைய நன்றி.

இந்த நூலை அழகான முறையில் வடிவமைத்துக் கொடுத்த, எஸ்.அனுராதா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி. இந்த நூலைப் படித்து பயன்பெற்ற உங்களுக்கும் நன்றி.



# உசாத்துணை

**போகர் 7000 (சப்த காண்டம்)**

அகத்தியர் பனிரெண்டாயிரம் நான்காம் காண்டம்

சித்தர்கள் வரலாறு, எஸ்.பி. இராச்சந்திரன்

Fleming, T., 2009. The Presence and Power of the Cosmic Yin: An Analysis of Chinese Women in Taoism. Footnotes, 2.

Cleary, T. ed., 1996. Immortal Sisters. North Atlantic Books.



# சித்தர் நூல்கள்

**போகர் சித்தர் நூல்கள்**

*போகர் 7000 (சப்த காண்டம்), போகர் 12000 *, நிகண்டு 1200, ஜெனன சாகரம், கற்ப சூத்திரம், வைத்திய சூத்திரம், முப்பு சூத்திரம், ஞான சூத்திரம், அட்டாங்க யோகம், பூஜா விதி, கற்பம் 360, இரண வாகடம் 100, நிகண்டு பதினேழாயிரம் சூத்திரங்கள், எழுநூறு யோகம்.*

**காலாங்கி சித்தர் நூல்கள்**

*ஞானம் 100, ஞான சாராம்சம் 100/500, ஞான சூத்திரம் 29, ஞான விந்த ரகசியம் 30, ஞான பூசா விதி 80, உபதேச ஞானம் 34, தண்டகம் 80, இந்திரசால ஞானம் 46, உபதேச ஞானம் 34, சூத்திரம் 33, வைத்திய காவியம் 1000, பக்சணி 51, கற்ப விதி 34, தீட்சா விதி 35, வகாரத்திரவியம் 200.*

**புலிப்பாணி சித்தர் நூல்கள்**

*வைத்தியம் 500, சோதிடம் 300, சாலம் 325, வைத்திய சூத்திரம் 200, பூசா விதி 50, சண்முக பூசை 30, சிமிழ் வித்தை 25, சூத்திர ஞானம் 12, சூத்திரம் 90, புலிப்பாணி வைத்திய சாரம்.*

**கமலமுனி சித்தர் நூல்கள்**

*கமலமுனி முந்நூறு, ரேகை சாஸ்திரம், கமலமுனி பத்து*



